மலர் 16 இதழ் 152

NAVAMANI (Tamil Daily) MADRAS

4 பக்கம் 25 காசு

MR No. 3897

Phone No. 76190




# நவமணி

கூட்டுறவு முறையில் தொழிலாளர்கள் நடத்தும் ஒரே தமிழ்த் தினசரி

சென்னை 15-2-76 ஞாயிறு          வெளியூர் 16-2-76 திங்கள்







சென்னை கிண்டி காந்தி மண்டபத்திற்கு அருகே "காமராஜ் நினைவகத்தை" திறந்துவைத்து காமராஜரின் சமாதிக்கு பிரதமர் இந்திரா அஞ்சலி செலுத்தினார். பிரதமருடன் காங்கிரஸ் தலைவர் பரூவா, மத்திய மந்திரி பிரம்மானந்த ரெட்டி, காமராஜரின் தங்கை நாகம்மாள் ஆகியோரும் மரியாதை செலுத்துவதை படத்தில் காணலாம்.

## மோகன், டி. டி. கே. கனவு நனவாகியது

மறைந்த தலைவர்கள், மோகன் குமாரமங்கலம் டி. டி. கிருஷ்ணமாச்சாரி ஆகியோரது கனவு இன்று நனவாகியது.

இரு காங்கிரஸ் கட்சிகளும் தமிழ் நாட்டில் இன்று இணைவது வரலாற்றில் ஒரு திருப்பு முனையை உண்டாக்கும் நிகழ்ச்சியாகும்.

இந்த இணைப்பு, தமிழ் நாட்டில் தேசிய ஜனநாயக சக்திகள் வலுப்பெறவும், மற்ற மாநில பழைய காங்கிரசார் பின்பற்றக்கூடிய ஒரு வழி முறை ஏற்படவும் வழி வகுத்துவிட்டது.

### டி. டி. கே. முயற்சி

இரு காங்கிரசும் இணைய வேண்டுமென்ற கருத்தை முதன் முதலில் தெரிவித்தது டி. டி. கே. தான். இந்திராவுடனும், காமராஜருடனும் டி. டி. கே. சுமுக உறவுடன் இருந்தார்.

அதைப்போல் மத்திய அமைச்சராக இருந்த மோகன குமாரமங்கலமும் இந்த முயற்சியில் ஈடுபட்டிருந்தார்.

ஆனால் துரதிர்ஷ்டவசமாக 1973-ல் அவர் விமான விபத்தில் இறந்து விட்டார்.

ஆயினும் காமராஜ் 1973 ஆகஸ்டில் டெல்லியில் இந்திராவை சந்தித்தார். அதைத் தொடர்ந்து புதுவை தேர்தல் உடன்பாடு உருவானது.

ஆனால் புதுவைத் தேர்தலுக்குப் பிறகு இந்த முயற்சியில் தேக்கம் ஏற்பட்டது.

### காமராஜ்

அகில இந்திய பழைய காங்கிரஸ் தலைவர்களான மொரார்ஜி தேசாய் போன்றவர்களின் நடவடிக்கையில் காமராஜருக்கும் அதிருப்தி ஏற்படத் தொடங்கியது.

இரு காங்கிரசும் இணைவதே சரி என்று காமராஜ் உணர்ந்து தமது சகாக்களிடமும் கூறினார்.

இறப்பதற்கு 5 நாட்களுக்கு முன்பு செப்டம்பர் 27-ம் தேதி மரகதம் சந்திரசேகரிடம் காமராஜ், நவம்பரில் டெல்லிக்கு வந்து இணைப்பு பற்றி இந்திராவிடம் பேசுவதாக தெரிவித்திருந்தார்.

ஆனால் இயற்கை அதனைத் தடுத்துவிட்டது.

காமராஜரின் இறுதி சடங்கில் கலந்து கொண்ட பல தலைவர்களும் காங்கிரசின் எதிர்காலம் பற்றி சிந்தித்தனர்.

அக்டோபர் 12-ம் தேதி கூடிய செயற்குழுக் கூட்டத்தில் இணைப்புக்கு ஆதரவாகப் பலர் கருத்து தெரிவித்தனர். அதன் பிறகு மாவட்டங்களில் சுற்றுப் பயணம் செய்வது என்று தீர்மானிக்கப் பட்டது.

ஆனால் பி. ராமச்சந்திரன் இந்தப் பிரச்னையில் கடுமையான போக்கை மேற்கொண்டார். இதனால் மாவட்ட சுற்றுப் பயணத்தைப் புறக்கணிப்பது என்று இணைப்பு ஆதரவாளர்கள் முடிவு செய்தனர்.

துணைத் தலைவர் மகா தேவன் பிள்ளையும் மற்றவர்களும் தனியாகச் சுற்றுப் பயணம் செய்து ஊழியர்கள் இணைப்புக்கு ஆதரவாக இருப்பதைக் கண்டறிந்தனர்.

### கருணாநிதி

இத்தனை நாள் காங்கிரசை கடுமையாக எதிர்த்துவந்த கருணாநிதிக்கு திடீர் என்று அதன் நிகழ்ச்சிகளில் ஆர்வம் பிறந்தது.

இணைப்புக்கு எதிராக கருணாநிதி வேலைசெய்வதாக இணைப்பு ஆதரவாளர்கள் குற்றம் சாட்டினர்.

இணைப்பு ஏற்படாமல் போனால், தமிழ் நாட்டில் பழைய காங்கிரஸ், புது காங்கிரஸ்-அ தி மு க கூட்டணி, தி மு க என்று முக்கோணப் போட்டி ஏற்பட்டால் தேர்தலில் அது திமுகவுக்கு பயன் தரும் என்று கருணாநிதி எண்ணினார்.

ஆனால் நிலைமை வேறாகிவிட்டது. இரு காங்கிரசும் இணைவது தவிர்க்கமுடியாததாகி விட்டது

இந்த நேரத்தில் காமராஜ் இல்லையே என்ற மனக்குறை தான் காங்கிரசார் உள்ளத்தில் தோன்றிய ஒரே குறையாகும்.

## சென்னை இணைப்பு மாநாடு:

## மக்கள் வெள்ளம்

# பொங்கி வழிகிறது

## எங்கு பார்த்தாலும் பல்லாயிரக் கணக்கான லாரிகள், பஸ்கள்

சென்னை, பிப். 15—இன்று மாலை சென்னை கடற்கரையில் நடைபெறுகிற இரு காங்கிரஸ் இணைப்பு மாநாட்டிற்காக, தமிழ் நாட்டின் மூலை முடுக்குகளிலிருந்து லட்சக் கணக்கான மக்கள், சென்னை நகருக்கு வந்துவிட்டனர்.

சென்னையில் எங்கு பார்த்தாலும் ஜனக்கூட்டமும் கண்ணுக்கெட்டிய தூரம் லாரிகளும் காட்சியளிக்கின்றன.

பல்லாயிரக்கணக்கான லாரிகளிலும், பஸ்களிலும் வெளியூர்களிலிருந்து மக்கள் வந்த வண்ணம் உள்ளனர்.

கடந்த சில தினங்களாக சென்னைக்கு வருகிற ரெயில்களில் தாங்க முடியாத கூட்டம் காணப்பட்டது.

### சிவாஜி வீட்டில்.

வெளியூர்களிலிருந்து லாரிகளில் வருகிற பல்லாயிரக் கணக்கான மக்கள் இன்று சிவாஜி கணேசனின் வீட்டிற்கு போய் மகிழ்ச்சி ஆரவாரம் செய்து அவருக்கு உற்சாக வரவேற்பு அளித்தனர். இன்று காலை 10 மணி வரை சுமார் 500 லாரிகள் அவருடைய வீட்டிற்கு வந்தன.

### வங்க கடல பொங்கியதோ !

வங்கக் கடல் பொங்கிவந்து விட்டதோ என்று கூறும் அளவுக்கு கடற்கரையில் ஏற்கனவே லட்சக்கணக்கான மக்கள் கூடிவிட்டனர்.

சுதந்தரப் போராட்டக் காலத்தில் காணப்பட்ட உற்சாகத்துடன் மக்கள் பீடு நடைபோட்டு சாரி சாரியாக கடற்கரையை நோக்கி சென்றவண்ணம் இருக்கிறார்கள்.

நாட்டிற்கு சுதந்திரம் வாங்கிக் கொடுத்த காந்தி சிலை எதிரே நெருங்கியதும், பொருளாதார விடுதலைக்கு பாடுபடுவதாக திடஉறுதி எடுத்துக் கொண்டவண்ணம் மக்கள் செல்கிறார்கள்.

சென்னை நகரில் உள்ள எல்லா முக்கிய சாலைகளும் லாரிகள், பஸ்களும் நிரம்பியுள்ளன.

இன்று மாலை நடக்கிற இணைப்பு மாநாட்டில் பிரதமர் இந்திராவும், காங்கிரஸ் தலைவர் பரூவாவும் சிறப்புரை ஆற்றுவார்கள்.

## தி. மு. க. ஆட்சியில் தமிழகம் பின்தங்கியது: இந்திரா குற்றச்சாட்டு

சென்னை, பிப். 15— கருணாநிதி ஆட்சியில் தமிழகம் தொழில் துறையிலும், மற்ற துறையிலும் பின்தங்கிவிட்டது என்று பிரதமர் இந்திரா காந்தி குற்றஞ்சாட்டினார்.

இந்தக் குற்றச்சாட்டை பிரதமர் மறைமுகமாகத் தெரிவித்தார்.

இன்று காலை சோமங்கலம் ஊரக அபிவிருத்தி திட்டத்தைத் துவக்கிவைத்துப் பேசுகையில் பிரதமர் இந்திரா காந்தி இதுபற்றி குறிப்பிட்டார்.

அவர் கூறியதாவது:—

தொழில் துறையிலும், நிர்வாகத்துறையிலும் இந்தியாவிலேயே தமிழகம் சிறந்து விளங்கியது. ஆனால் கடந்த சில ஆண்டுகளாக தமிழகம் பின் தங்கிவிட்டது.

மறுபடியும் தமிழகம் இழந்த இடத்தைப்பிடித்து முதல் நிலை அடைய முயற்சி எடுக்க வேண்டும்.

பிரதமர் தமது பேச்சை "சகோதரர்களே சகோதரிகளே" என்று தமிழில் துவக்கி "வணக்கம்" என்று தமிழில் சொல்லி முடித்தார்.

கவர்னரின் புரட்சித் திட்டம் அமுலாகிற சோமங்கலத்தில் பிரதமருக்கு மாபெரும் வரவேற்பு அளிக்கப்பட்டது.

### சோமங்கலத்தில்

ஹெலிகாப்டரில் பிரதமர் வந்ததும் சீருடை அணிந்த 58 சிறுமிகள் அவருக்கு மலர் தூவி வரவேற்றனர்.

விழாவுக்கு வந்திருந்தவர்களை ஆர். வி. சுப்பிரமணியம் வரவேற்றார். கவர்னர் ஷா தலைமை வகித்தார்.

விழாவை ஒட்டி கண்காட்சி ஒன்றும் நடந்தது. பிரதமருக்கு நினைவுப்பேழை ஒன்றை கவர்னர் ஷா கொடுத்தார்.

தமிழ்நாடு காங்கிரஸ்

புது தலைவர் யார்?

## இந்திரா-பரூவா ஆலோசனை

சென்னை, பிப். 15—காங்கிரஸ் தலைவர் பரூவா இன்று காலை சென்னையில் பிரதமர் இந்திராவை சந்தித்துப் பேசினார். தமிழ்நாடு காங்கிரசுக்கு புது தலைவராக யாரை தேர்ந்தெடுப்பது என்பது பற்றி அவர்கள் முக்கிய ஆலோசனை நடத்தினார்கள்.

பக்தவத்சலம், கே எஸ். ராமசாமி, ஆர். வெங்கட்ராமன் ஆகியோருடன் இது பற்றி ஏற்கனவே பரூவா ஆலோசனை நடத்தினார்.

## திறப்பு விழா

சிதம்பரம், பிப். 15—சிதம்பரம் அருகே உள்ள புவனகிரி பஞ்சாயத்து யூனியனைச் சேர்ந்த ஆதிவராக நத்தத்தில் புவனகிரி பஞ்சாயத்து யூனியன் தலைவர் ஆர். பாலகிருஷ்ணன் புதிதாக கட்டப்பட்ட பள்ளிக் கட்டிடத்தை திறந்துவைத்தார்.

## ஒரே வழி: ஆர். வி. பேட்டி

சென்னை, பிப். 15—நாட்டிற்கு நற்பணி செய்வதற்கு காங்கிரஸ் இணைப்புதான் ஒரே வழி என்று முன்னாள் மந்திரி ஆர். வெங்கட்ராமன் கூறினார்.

நவமணி நிருபருக்கு இன்று அளித்த பேட்டியில் அவர் கூறியதாவது—

"தமிழ்நாட்டின் முன்னேற்றத்தைக்கருதி இரு காங்கிரஸ் கட்சிகளும் ஒன்றாக இணைந்து சேவைபுரிவது இப்போது மிகவும் அவசியமாகும்.

## மருமகளிடம் இந்திராவின் அன்பு

மகாபலிபுரம், பிப். 15— பிரதமர் இந்திரா காந்தி, தமது மருமகளிடம் எவ்வளவு அன்பு கொண்டிருக்கிறார் என்பதைக் காட்டும் வகையில் நேற்று ஒரு சுவையான நிகழ்ச்சி நடந்தது.

பாதுகாப்பு அதிகாரிகளின் ஆலோசனையை மீறி பிரதமர் இந்திரா, நேற்று காலை மகாபலிபுரத்தில் பல்வேறு பகுதிகளைச் சுற்றிப் பார்த்தார்.

திடீரென்று ஒரு தோட்டத்தில் புகுந்தார். அங்கு இருந்த மலர்ச் செடிகள், அவருடைய கவனத்தைக் கவர்ந்தன. சில மலர்களைக் கொய்து, தமது மருமகளின் தலையில் வைத்து அழகு பார்த்தார். இருவர் முகத்திலும் புன்னகை தவழ்ந்தது.

பல்லவர் கால சிற்பங்கள் மட்டுமல்லாமல், இயற்கையின் அழகும், பிரதமரை கவர்ந்தது. கடற்கரையில் உல்லாசமாக சிறிது நேரம் நடந்தார்.

பின்னர் திடீரென்று கடல் ஸ்நானம் செய்ய தீர்மானித்தார். சிறிது நேரம் கடலில் மகிழ்ச்சியாக குளித்தார்.

தந்தையின் குணம் மகளுக்கு இருக்காதா? ஜவஹர்லால் நேரு கடலோர ஊர் எங்கு சென்றாலும் அங்கு தைரியமாக நீந்தி மகிழ்ச்சியாக குளித்து வந்தது போலவே அவருடைய புதல்வி இந்திராவும் அந்த வழியைப் பின்பற்றினார்.



## திங்கள், பிப். 16

### சென்னை-1

(416.7 மீ)

**காலை:**

6-55 வந்தேமாதரம்
6-05 நாலடியார்
6-10 வந்தனை செய்வோம்
6-25 இன்றைய சிந்தனை
6-30 செந்தளிர்
7-00 தமிழ் மணம்
7-25 மீண்டும் கேட்போம்
7-45 நகர்வலம்
8-00 சிந்தனைத்துளி திரைகானம்
8-20 வசந்தாசரவணன் —வீணை
9-30 ஒலிபரப்பு முடிவு

**பகல்**

12-02 திரை மெட்டுகள்
12-10 தொடக்கப்பள்ளிகளுக்கு
12-50 திரைகானம்
1-00 மாமாலை
1-30 காஞ்சீபுரம் கி. கே. எல்லப்பா —நாதஸ்வரம்
2-10 ராஜலட்சுமி நாராயணன்—பாட்டு
3-00 ஒலிபரப்பு முடிவு

**மாலை**

5-00 ஒலிக்கதிர்
5-10 காஞ்சீபுரம் சி. கே. எல்லப்பா—நாதஸ்வரம்
5-30 தொழிலாளர்களுக்கு
6-05 திரைகானம்
6-15 உரையாடல்
7-00 திரைகானம்
7-10 மாவட்டச்செய்திமடல்
7-25 விவசாயிகளுக்கு
8-00 மாப்பிள்ளை எங்கே? —நாடகம்
8-15 மெல்லிசை
8-30 செய்தி மலர்
8-45 பேட்டி
9-15 டாக்டர் எம். பால முரளிகிருஷ்ணா—பாட்டு
10-30 திரைகானம்
11-05 ஒலிபரப்பு முடிவு

### சென்னை-2

(211.3 மீ)

**காலை**

6-55 வந்தேமாதரம்
7-25 அ. இ. ரே. பல்கலைக் கழக தபால் படிப்பு மாணவர்களுக்கு
7-45 நாட்டுப்பாடல்கள்
8-20 ஒலிபரப்பு முடிவு

**பகல்**

12-40 மேற்கத்திய இசை
1-30 ஒலிபரப்பு முடிவு

**மாலை**

5-50 திரைமெட்டுக்கள்
6-00 மேற்கத்திய இசை
6-30 & 7-15 இளைய பாரதம்
8-15 டெல்லி அஞ்சல்
8-25 பூச்சரம்
8-35 நாடாளுமன்றத்தில் இன்று
9-15 ஸ்பாட்லைட்
9-30 தெலுங்கு நிகழ்ச்சிகள்
10-00 மேற்கத்திய இசை
11-00 ஒலிபரப்பு முடிவு

### திருச்சி

(319. மீ)

**காலை**

6-00 வந்தே மாதரம்
6-10 காலைக் கதிர்
6-25 நெறிவிளக்கம்
6-30 விவசாயிகளுக்கு
6-35 சிந்தனைக்கினியவை
7-00 அறிவுவளர
7-25 கிராமம் போவோமே
8-20 வளர்ச்சிக்குவழி
8-25 திரைகானம்
9-00 ஒலிபரப்பு முடிவு

**பகல்**

12-02 திரைகானம்
12-10 தொடக்கபள்ளிகளுக்கு
12-50 தேச பக்தி பாடல்கள்
1-00 டி. என். கிருஷ்ணன் —வயலின்
1-30 கிளாரினெட் —நிலையவித்வான்
2-10 இசைமாலை: ராதா ஜெயலட்சுமி ஸ்ரீரங்கம் கோபாலகிருஷ்ணன்
2-30 திரைகானம்
2-40 நலம்பட வாழ்வோம்
2-45 வண்ணச்சுடர்
3-00 ஒலிபரப்பு முடிவு

**மாலை**

5-30 தொழிலாளர்களுக்கு
6-05 அறிவிப்புகள்
6-10 சேவை செய்திகள்
6-40 கிராம சமுதாயம்
7-10 மாவட்ட செய்திமடல்
7-25 விவசாயிகளுக்கு
8-00 இளையபாரதம்
9-15 சாத்தூர் ஏ. ஜி. சுப்பிரமணியம்—பாட்டு
10-30 ஒலிபரப்பு முடிவு.

சென்னை 1-ல் தமிழில் செய்தி காலை 7-15, 12-40, மாலை 7-15. ஆங்கிலத்தில் செய்தி பகல் 12-00 மாலை 2-00, 6-00 இரவு 9-00 மாநிலச் செய்திகள் பகல் 12-30, 6-30

திருச்சி: தமிழில் செய்தி காலை 7-15, 12-40, மாலை 7-15 ஆங்கிலத்தில் செய்தி காலை 9-10, 12-00, 2-00, 6-00, 8-00.

விவிதபாரதி: இரவு 9-15: தபால் பெட்டி.

---

## சிறுகதை

# பிரிந்தவர் கூடினால்..

"நதி என்னதான் திசை மாறி, தாறுமாறாக ஓடினாலும் கடைசியில் மகா சமுத்திரத்துக்குத்தாண்டா வரவேண்டும்."

அக்கா பார்வதி சொன்ன இந்த வார்த்தைகளின் அர்த்தம் வடிவேலுவுக்குப் புரிந்தாலும், அக்கா கொண்டிருந்த அசையாத நம்பிக்கையில் பாதி கூட அவனுக்கு இல்லை. தம்பி கந்தசாமி கோபித்துக் கொண்டு, என்றுமே இதமே பேசிவந்த சித்தப்பாவையும் அழைத்துக்கொண்டுவெளியே போய் ஏழு ஆண்டுகள் ஆகிவிட்டன. அவன் எப்படி மீண்டும் பிறந்த வீட்டுக்கு, பிறந்த கிராம மண்ணுக்கு மீண்டும் வருவான்? அன்று நடந்ததெல்லாம் கண் முன் நிழலாடின.

ஏதோ ஒரு முக்கியமான காரணத்தை முகாந்திரமாகக் காட்டி கந்தசாமி வீட்டைவிட்டு அகலவில்லை. சொத்துரிமை காரணமாக அவன் போக முற்பட்டிருந்தால், அக்காவே இடைமறித்து சகல பொறுப்புக்களையும் அவன் வசம் ஒப்படைத்து, எட்ட நின்றிருப்பாள். என்றுமே அக்காவுக்கு குடும்பத்தின் எதிர்காலமும் குழந்தைகளின் சுபீட்சமும்தான் இலட்சிய வெறியாக இருந்தன. சிறுவயதிலேயே தந்தையையும் தாயையும் இழந்த அவர்களுக்கு பார்வதிதான் அம்மாவாகவும் அப்பாவாகவும் மாறினாள். வடிவேலுவுக்கும் கந்தசாமிககும் எதிர்காலத்தை வகுத்தவளே அவள்தான். நல்ல மருமகள்களைக்கொண்டு வந்தாள். அவர்களுக்குப் பிறந்த குழந்தைகளைத் தன் குழந்தைகளைப்போல வளர்த்தாள். சித்தப்பாவின் ஆதர்ச சக்தி வேறு பக்க பலமாக இருக்கவே, கிராமத்தில் அவர்களுடைய வீடு பலருடைய மதிப்புக்கும் அபிமானத்துக்கும் பாத்திரமாக இருந்தன.

ஆனால் பக்கத்து வீட்டில் வசித்து வந்த வடிவேலுவின் பெரியப்பாவின் பிள்ளை மாணிக்கத்தின் வயிறு எரிந்தது. அவனுடைய தாத்தாவும் வடிவேலுவின் தாத்தாவும்உடன்பிறந்தவர்களென்ற தாபமோ, இரு குடும்பங்களும் ஒரே மரத்தின் கிளைகள்தான் என்ற எண்ணமோ அவனுக்குவரவில்லை. கிராமத்தார் அவனை மதிக்காமலிருப்பதற்குக் காரணமே, அன்புக்கும் அபிமானத்துக்கும் ஆளானபார்வதிதான், என்று அவன் நினைத்தான்.

அவனுக்குப் பள்ளிக்கூடத்தில் கணக்கு வரவில்லை. ஆனால் முதிர்ந்த வயதில் மனக்கணக்கு நன்றாகவந்தது. அந்தக் கணக்கு நல்ல வழியில் வரக்கூடாதா?

ஒரு நாள் பிற்பகல்...

அறுவடைக் காரியங்களை மேற்பார்வை செய்ய தம்பி கந்தசாமி பண்ணைக்குச் சென்றிருந்தான். பார்வதி ஒரு அவசர காரியமாக செங்கற்பட்டுக்குப் போயிருந்தாள் தேனீரைக் குடித்து விட்டு, வெற்றிலை பாக்குப் புகையிலையுடன் கடைசிக் குழந்தையை மடிமேலிட்டு வடிவேலு உட்கார்ந்திருந்தான்.

"என்ன அண்ணா எப்படி இருக்கீங்க... தம்பி எங்கே காணோம்?

"அறுவடைக்குப் போயிருக்கிறான்"

"அக்காவும் பஸ ஏறிப் போயிருக்கிறார்களே எங்கே?"

"செங்கற்பட்டுசெட்டிக்குப் போயிருக்காங்க... டீ சாப்பிடுகிறாயா, மாணிக்கம்"

"நான் டீ குடிக்க வரலே, அண்ணே" என்ற மாணிக்கம் "உங்களுக்கு இப்போ எத்தனை குழந்தைகள்? என்று கேட்டான்.

திடீரென்று ஏன் இந்த மாதிரி விடை தெரிந்த கேள்வியை அசட்டுத்தனமாக மாணிக்கம் கேட்கிறான் என்று வடிவேலுவுக்குப் புரியவில்லை

மூன்று பெண்கள். ஒரு பிள்ளை என்றான் அவன்.

கந்தசாமியின்போக்குஎனக்குப் பிடிக்கவில்லை. உங்க அக்கா அவன் மீது அதிக வாஞ்சை காட்டற மாதிரித் தெரியுது. நான் சொல்ல வேண்டியதைச் சொல்லிவிட்டேன்.. அப்புறம் உங்க சாமர்த்தியம்;" என்றான் மாணிக்கம்.

"நீ என்ன சொல்றே?

"உங்களைப் போலத்தான் மணியக்காரருடைய அண்ணா பிள்ளைகள் ராம லட்சுமணாகளை மாதிரி இருந்தார்கள். கடைசியில் என்ன ஆச்சு, ஹைகோர்ட்டு வரை போய் வந்தார்கள். நிலம் புலன் எலலாம் ஒழிந்தது ... நான் சொல்ல வேண்டியதைச் சொல்லிட்டேன்... பொம்மனாட்டிங்களை நம்பி எதையும் செய்யக் கூடாது."

மாணிக்கம் எழுந்து போனான். வடிவேலுவுக்கு ஆத்திரம் பீறிட்டுக் கொண்டு வந்தது. இந்த மாணிக்கம் குடும்பத்தைப் பிளக்கப்பார்க்கிறான் என்பது நிதர்சனமாகத் தெரிந்தது. ஆனால் சுபாவத்தில் யாரையும் மனம் நோகப் பேசத் தெரியாத அவன் மாணிக்கத்தின் முட்டாள்தனத்தைக் கண்டு பரிதாபப்பட்டான்.

அக்காவை அவன் தெய்வமாக மதிக்கிறான். குழந்தைகள் 'அத்தை', 'அத்தை' என்று உயிரை விடுகிறார்கள். தம்பி கந்தசாமி சுபாவத்தில் அவசரக்காரன், பொறுமை இழந்து கோபத்தில் பேசக் கூடியவன். ஆனால் அக்காவைப் பொறுத்த வரையில் கட்டுக்கு அடங்கி இருக்கிறவன். சித்தப்பாவிடம் அவனுக்கு காய்ச்சல் அதிகம் தான. ஆனால் அந்தச் சித்தப்பாவே, அக்காவின் திறமையை மெச்சுகிறவராயிற்றே?

அன்று இரவு சாப்பிட உட்கார்ந்தபோதுதான்கந்தசாமி திடீரென்று மாறியிருப்பது வடிவேலுக்குப் புரிந்தது.

மறுநாள் அண்ணா, இன்னிக்கும் நாளைக்கும் நீ அறுவடையைப் பார்த்துக்க நான் பட்டணம் போகப் போகிறென், என்றான் கந்தசாமி.

"எதுக்கு?" என்று கேட்டாள் பார்வதி.

"அது என் விஷயம்."

இந்த வார்த்தைகளைக்கேட்டதும் வடிவேலுக்குத் தூக்கி வாரிப்போட்டது. இதுநாள் வரையில் யாரும் எதையும் தன் சொந்த விஷயம் என்று அந்த வீட்டில் பேசியதில்லை. யாருக்கும் எந்த ரகசியமும கிடையாது. கந்தசாமி ஏன் இப்படிப் பேசுகிறான்?

பார்வதி சிரித்துக் கொண்டே குழம்பைப் பரிமாறினாள்.

"உனக்கு சிரிப்பாக இருக்கிறது, அல்லவா?" என்று கந்தசாமி பாய்ந்தான்.

"அழட்டுமா?"

"அழவைக்கத்தான் போகிறேன்."

"டேய் கந்தா அக்காகிட்டேயா இப்படிப் பேசறே!"

"நீ வேணும்னா அக்காவை தலையிலே வைச்சுட்டுக் கூத்தாடு. ஏதோ நாம சின்னக் குழந்தைகளாக இருந்தபோது நம்மை வளர்த்தினாங்களேன்னு பொறுத்துட்டிக்கேன்... இவ நாட்டாமை நாளுக்கு நாள் அதிகமாயிட்டே வருது..."

பார்வதி ஒன்றும் பேசவில்லை. பார்வதி நாதி அற்றவள் அல்ல. அவளுக்கு என்று இரண்டு வீடுகளும், நிலமும் இருக்கின்றன

நினைத்தால்வெளியேறலாம், ஆனால், குடும்பம் குடும்பம் என்றுஒட்டிக் கொள்ளுகிறவள் அவள். ஒரு தம்பி புத்தி சுவாதீனமற்றுப் போய், யார் பேச்சையோ கேட்டு பைத்தியக்காரனைப் போலப் பேசுவதைக் கேட்டு வெளியேறுகிறவள் அல்ல அவள்.

வடிவேலுவுக்கு விஷயம் தெளிவாயிற்று பங்காளிக் காய்ச்சலைத் தூண்டிவிட்டிருக்கிறவன் பக்கத்து வீட்டு மாணிக்கம்தான். ஆனால் கந்தசாமிக்கு மூளை எங்கே போயிற்று.

முதலில் தன் மனைவியையும் இரண்டு குழந்தைகளையும் அவளுடைய பிறந்தவீட்டுக்கு அனுப்பினான் கந்தசாமி ஒரு வாரத்துக்குப் பிறகு, சித்தப்பாவையும் அழைத்துக் கொண்டு பட்டணத்துக்குப் போனான்.

"சித்தப்பா நீங்க ஏன் போகணும்..." என்று பார்வதியும் வடிவேலுவும் கேட்டார்கள்.

"உங்களுக்கு ஒரு விஷயம் புரியவில்லை. கன்றுக்குட்டி துள்ளறது, அது போகிற போக்கில் விட்டால்தான் தானாகத் திரும்பி வரும்."

"நீங்+கூடப் போகணுமா?

"காரணமாகத்தான், போறேன். நான் கண்ணை மூடறத்துக்குமுன்னாடி, அவன் பிறந்த இதே வீட்டிலே கொண்டுவந்து சேர்க்கிறேன். கவலைபடாதீங்க!

இப்படிப் போன கந்தசாமி தன் நிலத்தையும் பணத்தையும் பிரித்துக் கொண்டான். நிலத்தை மாணிக்கத்திடமே அடகு வைத்து கிடைத்த பணத்தை சென்னையில் வாரி இறைத்தான்.

வடிவேலுவும் பார்வதியும் அடிக்கடி சென்னை சென்று சித்தப்பாவைப் பார்த்து வந்தார்கள். சித்தப்பாவும்சமயம் கிடைத்த போதெல்லாம் கிராமத்துக்கு வந்துபோனார். நாளுக்கு நாள் அவர் உடம்பு இளைத்துக் கொண்டே வருவதைக் கண்ட பார்வதி, "தம்பியை எப்போ திருப்பிக் கூட்டி வரப் போறீங்க? என்று கேட்டாள்.

"இப்பத்தான் முக்கால் வாசி கெட்ட குணம் கரைஞ்சிருக்கு. இருக்கிறதும் கரைஞ்சுட்டா வந்துவிடுவான்."

"அதுவரையில் நாம் காத்திருக்கக்கூடாது. சித்தப்பா.. கந்தசாமியின் பெண்டாண்டிகிட்டே ரகசியமா சொல்லி, மாணிக்கத்திடமிருந்து நிலத்தை மீட்டுடுவோம்."

"தெரியும்," என்றார் சித்தப்பா, பிறகு அவர் தொடர்ந்து, "உங்களுக்கு ஒன்று தெரியுமா?" என்று கேட்டார்.

"என்ன சித்தப்பா...?"

"கந்தசாமி உள்ளூற மனம் புழுங்கினான் நான செய்த காரியம் தப்புத்தான்னு எங்கிட்டேயே ஒரு தடவை சொல்லி அழுதான், சரி, திரும்ப கிராமத்துக்கே போவோம்னு நான் சொன்னேன், எந்த முகத்தோடு போவேன்னு கேட்கிறான்."

"கூடப் பிறந்த அண்ணன் கிட்டேயும் அக்கா கிட்டேயும் என்ன மான அவமானம் வேண்டியிருக்கு?" என்றான் வடிவேலு.

"அக்கா மனசைப் புண் படுத்திட்டதாக அவன் நினைக்கிறான். அவள் மன்னிக் மாட்டாளோ என்று பயம்.

"பாவம்யார்யாரைமன்னிக்கிறது? எனக்கு வடிவேலுயும் ஒண்ணுதான். கந்தசாமியும் ஒண்ணுதான். குடும்பம்னு வந்தா நாலும்தான் இருக்கும். ஆன எலலாம் நம்ம வீட்டுகளுள்ளேயே பேசித் தீர்த்துக்கணும், பாவம், கந்தசாமி நம்ப பிரச்னைகளை வெளியே அம்பலப்படுத்தினான். அதனால் என்ன, இப்ப மனம் மாறினா அதுவே பெரிசு, குடும்பம் பழையபடி குதூகலமாயிடும். சித்தப்பா, இனிமேலும் நீங்க சும்மா இருக்கப்படாது.

இதெல்லாம் நடந்து ஒரு மாதத்திறகுப் பிறகு, ஒரு கலியாணத்தில் கந்தசாமிவடிவேலுவைச் சந்தித்தான்.

"அக்கா எப்படியிருக்கிறாள், அண்ணா?"

"கூடவே இருக்கிற என்னைப் பற்றிக் கவலைப்படறதில்லை. எங்கேயோ இருக்கிற உன்னைப் பற்றித்தான் சதா பேசிக் கொண்டிருக்கிறாள். உனக்குப் பிடிக்கிற ஸ்வீட்டைக் வீட்லே செய்யறதேயில்லை."

"அக்காவை எனக்குப் பார்க்கணும், அண்ணா,"

"பாரேன்?"

"பேசணும்!."

"என்ன பேசப்போகிறாய்."

"நான் திரும்பி வரேன்னு சொல்ல எனக்கு நாக்கு தான் ஆனாலும் அவள் என் அக்காதானே,.."

"உனக்குஞாபகம்இருக்கா, கந்தசாமி, நீ போன புதிதில் உன்னைத் திரும்பி வரும்படி அடிக்கடி சொன்னாள். நீ கேட்கவில்லை.

"இப்போ?"

"அக்கா மாறவேயில்லை... மாறவும் மாட்டாள்"

"சரி அண்ணா, சித்தப்பா சொல்ற மாதிரி எல்லாரும் பழையபடி ஒரே வீட்டிலேயே இருப்போம். நாளைக்குநானும் என் மனைவியும்வரோம்"

"நாளைக்கு என்ன. இன்னிக்கே!" என்றான் வடிவேலு அவன் சொல்லி வாய் மூடவில்லை.

"வடிவேலு, கந்தசாமி" என்ற அலறல் கேட்டது.

திரும்பிப் பார்த்தார்கள்.

"சித்தப்பாவை ஆஸ்பத்திரிக்கு கொண்டுபோயிருக்கிறார்கள்..."

கலியாணக் கூட்டத்தில் ஒரு பெரியவர் கத்தினார்.

ஒரே வீட்டில் பழைய வாழ்க்கை உதயமாகப் போகிறதைக்காணக் கொடுத்து வைக்காமலேயே சித்தப்பா அமரரானார்.

ஆனல் இருளிலும் ஒரு பொன் மயமான ஒளியை சகோதரர்கள் கண்டார்கள்.

இதற்கெல்லாம் காரணம் அக்காவின் அயராத அன்பும், சித்தப்பாவின் தளராத முயற்சியும் தான் என்று அவர்கள் எண்ணினார்கள்.

தாறுமாறாக ஓடுகிற நதிகளெல்லாம் கடைசியில் மகா சமுத்திரந்துக்குத்தான் வந்தாக வேண்டும் என்று சொன்ன அக்காவின் வார்த்தைகள் பொய்க்கவில்லை.

---

## சென்னையில் நினைவகம் திறப்பு

# காமராஜருக்கு உண்மை நினைவாலயம் எது? பிரதமர் இந்திரா பேச்சு

**சென்னை, பிப். 15—காமராஜரின் கொள்கைகளையும் லட்சியங்களையும் நிறைவேற்றுவதே அவருக்கு எழுப்பப்படும் உண்மையான நினைவகம் ஆகும் என்று பிரதமர் இந்திரா நேற்று கூறினார்.**

ஏறத்தாழ ஏழரை லட்ச ரூபாய் செலவில் கிண்டி கவர்னர் மாளிகைத் தோட்டத்தில் தமிழக அரசினால் இந்த நினைவாலயம் கட்டி முடிக்கப்பட்டுள்ளது.

காமராஜ் நினைவாலயத்தை சம்பிரதாயமாகத் திறந்து வைக்கும் வகையில் பிரதம மந்திரி ஒரு பித்தானை அழுத்தினார். நினைவாலயக் கதவுகள் தாமாகத் திறந்து கொண்டன. அப்போது சமாதியின் மீது ரோஜா இதழ்கள் பூமாரிப் பொழிந்தன. நினைவாலயத்தை பிரதமர் திறந்து வைத்த போது காமராஜின் தங்கை நாகம்மாளும், அவரது குடும்பத்தைச் சேர்ந்த எட்டுப் பேர்களும் உடனிருந்தனர்.

நினைவாலய வாசலில் பிரதமரை தமிழக கவர்னர் கே. கே. ஷா வரவேற்றார். பிரதம மந்திரியுடன் மத்திய உள்துறை அமைச்சர் பிரும்மானந்தரெட்டி, ராஜாங்க மந்திரி ஓம்மேத்தாவும் காங்கிரஸ் தலைவர் பருவாவும், தமிழ்நாடு காங்கிரஸ தலைவர் கே.எஸ். ராமசாமியும் வந்தார்கள். திறப்புவிழா செய்து முடித்ததும் காமராஜ் சமாதி மீது பிரதம மந்திரியும், பிரும்மானந்த ரெட்டி, ஓம் மேத்தா, பருவா, கவர்னர் ஷா ஆகியோரும் மலர் வளையம் வைத்து மரியாதை செலுத்தினர்கள். காமராஜ் தங்கை நாகம்மாள், அவரது குடும்பத்தினரிடம் பிரதமர் குசலம் விசாரித்தார்.

தமிழக அரசின் சார்பில் இந்திராவுக்கும், ஏனையோருக்கும் கவர்னர் ஷா ரோஜா மாலை அணிவித்தார்.

தமிழ்நாடு காங்கிரஸ் சார்பில் அதன் செயலாளர் டி. என். அனந்தநாயகி பிரதம மந்திரிக்கு மாலை அணிவித்தார். காமராஜின் தங்கை நாகம்மாள் மேடைக்கு வந்து பிரதம மந்திரிக்கு மாலை அணிவிக்கவந்தபோது அதை வாங்கி நாகம்மாளுக்கே இந்திரா காந்தி அணிவித்த போது, கூடி இருந்த மக்கள் பலத்த கரகோஷம் செய்தார்கள். அப்படியும் நாகம்மாள் விடுவதாகயில்லை. இன்னொரு மாலையை எடுத்து இந்திராவுக்கு அணிவித்து பிரதமரின் கரங்களை பிடித்து கண்களில் ஒற்றிக் கொண்டார். நாகம்மாளை பிடித்து அருகில் இருந்த நாற்காலியில கவர்னர் மனைவிக்குப் பக்கத்தில் பிரதமர் உட்கார வைத்தார்.

### நினைவகம் எது?

பிரதமர் இந்திரா பேசியதாவது:-

நம்முடைய பெருந்தலைவர் காமராஜ் நினைவாலயத்தைத் திறந்து வைப்பதில் பெருமகிழ்ச்சி அடைகிறேன். வெறும் கல், சிமெண்டினால் எழுப்பப்படும் நினைவுச் சின்னங்கள் உண்மையான, நிலையான நினைவுச் சின்னமாக இருக்க முடியாது. எந்தலட்சியம் குறிக்கோள்களுக்காகக் காமராஜ் வாழ்ந்தாரோ, பாடுபட்டாரோ அந்தக் குறிக்கோளுக்காக இளம் தலைமுறையினர் பாடுபடவேண்டும். மனத்தில் நிலைநிறுத்திக்கொண்டு இளம் தலைமுறையினர் பாடுபட வேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். காமராஜின் கொள்கைகளை குறிக்கோளைப் பின்பற்றி நடப்பதே அவருக்கு எழுப்பப்படும் உண்மையான நினைவுச் சின்னமாகும்.

### மக்களை மறக்காதவர்

அவர் எந்த உயர் பதவியை வகித்தபோதிலும் பாமர மக்களிடம் நெருங்கிய தொடர்பு கொண்டு அவர்களுடைய பிரச்னைகள் குறித்தே ஓயாமல் சிந்தித்து வந்தார். இதன் காரணமாகவே அவர்மீது மக்கள் நீங்காத பற்றுக்கொண்டிருந்ததற்குக் காரணமாகும்.

அவருடன் சேர்ந்து பணியாற்றும் வாய்ப்பு எனக்கு கிடைத்தது. அதனைப் பெரும் பேறாகவே நான் கருதுகிறேன் (பலத்த கரகோஷம்) முக்கியமான பிரச்னைகளில் அவருடைய வழிகாட்டும் தன்மை. ஆலோசனை எனக்கு கிடைத்திருக்கிறது.

பிற்காலத்தில் கருத்துவேறுபாடு ஏற்பட்டு, நாங்கள் வேறு பாதையில் மாற நேரிட்ட போதிலும், பல முக்கியமான தேசிய பிரச்னைகள் குறித்து காமராஜ் டெல்லி வந்த போதெல்லாம் விவாதிக்கும் வாய்ப்பு எனக்குத் தொடர்ந்து கிட்டி வந்தது.

### காமராஜ் செய்தி

காமராஜ் மரணமடைவதற்கு ஒரு வாரத்திற்கு முன்னதாக டெல்லியில் இருந்த எனக்கு ஒரு செய்தி அனுப்பினார் "இரு காங்கிரஸும் இணைய வேண்டும் என்று தமிழ்நாட்டைப் பொறுத்த வரையில் நாங்கள் முடிவு செய்து விட்டோம். மற்றவர் முடிவுக்காக காத்திருக்கப் போவதில்லை. அவர்கள் வர விரும்பும்போது வரட்டும்" என்று எனக்கு காமராஜ் செய்தி அனுப்பி இருந்தார்.

அவர் இன்னும் கொஞ்ச நாள் உயிருடன் இருந்திருப்பாரேயானால் அவர் செய்த இந்த முடிவை அவரே அறிவித்திருப்பார். அகால மரணமடைந்துவிட்டார். இதன் காரணமாகவும் காமராஜின் மறைவுச் செய்தி என்னைப் பொறுத்தவரையில் பேரதிர்ச்சியாக இருந்தது. அவருடைய மறைவு தமிழ் நாட்டுக்கு மட்டுமின்றி, இந்தியாவுக்கும் பேரிழப்பு, தனிப்பட்ட முறையில்எனக்கும் பேரிழப்பு என்று இந்திரா பேசினார்.

விழாவிற்குத் தலைமை வகித்து தமிழக ஆளுநர் கே. கே. ஷா தன்னுடைய வரவேற்புரையில் கட்டுப்பாடு, ஒழுங்கு ஆகிய பண்புகளைப் பிரதமர் போற்றிவருவது போலவே, காமராஜரும் மேற்படி பண்புகளை போற்றி அதற்கு முக்கியத்துவம் அளித்து வந்தார் என்றும் காரணம். கட்டுப்பாடு, ஒழுங்கு இல்லாமல் ஜனநாயகம் இல்லை என்றும் குறிப்பிட்டார்.

தலைமைச் செயலாளர் சபாநாயகம் நன்றி கூறினார்.

இந்த நிகழ்ச்சியில் பக்தவத்சலம், எம். கல்யாணசுந்தரம், பா. ராமச்சந்திரன், ம.பொ.சி. மற்றும்காங்கிரஸ் தலைவர்கள் கலந்து கொண்டனர்.

ஏராளமான மக்கள் கலந்து கொண்டனர்.

வழியில் மக்கள் ஆர்வம் காரணமாக பிரதமர் சிறிது கால தாமதமாக வந்து சேர்ந்தார்.

---

## ராமானுஜம் கோரிக்கை

# 'காங்கிரஸ் கட்சியை எல்லா மட்டத்திலும்' பலப்படுத்த பாடுபடுக

**சென்னை, பிப். 15—தமிழ்நாட்டில் இரு காங்கிரஸ் இணைப்பை தொடர்ந்து மாநிலத்தில் எல்லா மட்டத்திலும் கட்சியை பலப்படுத்தும் பணியில் தொண்டர்கள் முழுமூச்சுடன் ஈடுபட வேண்டும் என்று ஐ. என் டி. யூ. சி. பொதுச் செயலாளரான ஜி. ராமானுஜம் கூறினார்.**

இன்று சென்னையில் நடைபெறும் இரு காங்கிரஸ் இணைப்பை யொட்டி "நவமணி" நிருபருக்கு அவர் சிறப்பு பேட்டி அளித்தார்.

அவர் கூறியதாவது:—

இன்று நடைபெறும் இரு காங்கிரஸ் இணைப்பு மாநாடு வரலாற்று முக்கியத்துவம் வாய்ந்ததாகும்.

பிரதமர் இந்திராவும் காங்கிரஸ் கட்சித் தலைவரான பருவாவும் இந்த மாநாட்டில் கலந்து கொள்வதிலிருந்தே மாநாட்டின் முக்கியத்துவம் நன்கு புலனாகும்.

### திருப்புமுனை!

தமிழக வரலாற்றில் இந்த மாநாடு ஒரு திருப்பு முனையாக அமைந்துவிட்டது.

காங்கிரஸ்காரர்கள் அனைவரும் ஒன்றுபட்டு உழைப்பதற்கு இந்த மாநாடு ஒரு ஆரம்பம் ஆகும்.

### வரவேற்பு

இரு காங்கிரஸ இணைப்பை தொழிலாளர் வர்க்கம் மிக விரும்பி வரவேற்கிறது. பல்வேறு காரணங்களால் இது வரை தொழிலாளர் வர்க்கம் ஒன்றுபட்டு பாடுபட இயலாத நிலையில் இருந்தது. இனி அவர்கள் ஒன்றுபட்டு உழைப்பார்கள் என்று நம்புகிறேன்.

இணைப்பை அடுத்து மாநிலத்தில் மாவட்டத் தாலுகா, கிராம அளவில் கட்சியை உறுதிபடுத்தும் பணியில் காங்கிரஸ்காரர்கள் ஈடுபட வேண்டும்.

இருகாங்கிரஸ் இணைப்பு மூலம் தேசிய அரசியல் வாழ்வில் தமிழ்நாடு மீண்டும் பங்கு பெறும் வாய்ப்பு கிட்டியிருக்கிறது.

இதனால் நாட்டு முன்னேற்றத்திற்கு தனக்குரிய பங்கை தமிழ்நாடு செவ்வனே செய்ய இயலும்.

இவ்வாறு ராமானுஜம் கூறினர்.

---

# மந்திரிக்கு வரவேற்பு தந்த புலி

புவனேஸ்வரம், பிப். 15—மத்திய அமைச்சர் ஒருவருக்கு புலி வரவேற்பளித்தது.

மத்திய சுற்றுலாத்துறை அமைச்சர் ராஜ்பகதூர் அண்மையில் ஒரு நிகழ்ச்சியில் கலந்து கொள்வதற்காக புவனேஸ்வரம் வந்தார். அங்குள்ள சுற்றுலா அலுவலகத்தில் அவர் அமர்ந்து கொண்டிருந்தபோது திடீர் என்று புலி ஒன்று நுழைந்து அவரை வரவேற்றது.

புலிப் பாதுகாப்பு திட்ட அதிகாரி சம்ராஜ் சௌத்ரி என்பவர் இந்தப் புலியை வளர்ப்புக் குழந்தையாக வைத்திருக்கிறார். இந்தப் புலிக்கு "கைரி" என்று அவர் பெயரிட்டிருக்கிறார்.

சாதுவான இந்தப் புலி வெளிநாட்டினர் பலரையும் பெருமளவுக்குக் கவர்ந்திருக்கிறதாம், இதனுடன் புகைப்படம் எடுத்து பலரும் தங்கள் நாட்டுக்கு எடுத்துச் சென்றிருப்பதாக அமைச்சர் ராஜ் பகதூர் தெரிவித்தார்.

பிறகு அமைச்சரை வரவேற்றுப் பேசிய முதலமைச்சர் நந்தினி சத்பதி சுற்றுப் பயணிகளைக் கவரும திட்டங்களுக்காக மத்திய அரசு ஒரிசாவுக்கு உதவி செய்ய வேண்டும் என்று கேட்டுக் கொண்டார்.

---

# தி.மு.க.வினர் விலகல்

ஈரோடு, பிப். 15—ஈரோடு அருகில் பெரிய அக்ரகாரம் தி. மு. க. கிளையின் தலைச் செயலாளர் தி.மு.க.விலிருந்து விலகியுள்ளதாக அறிவித்திருக்கிறார்.

பிரதமரின் 20 அம்ச திட்டத்தையும், தமிழகத்தில் ஜனாதிபதி ஆட்சியையும் வரவேற்பதாக தெரிவித்திருக்கிறார்.

# 'தி.மு.க. ஆட்சியில் ஊழல் வழக்கமாக மாறிவிட்டது': பருவா கடும் தாக்கு

சென்னை, பிப், 15—தமிழ் நாட்டில் நடந்த திராவிட முன்னேற்றக் கழக ஆட்சியில் ஊழல் என்பது நிலைபெற்ற ஒரு வழக்கமாக அமைந்து விட்டது என்று காங்கிரஸ் கட்சித் தலைவர் பருவா கூறினார்.

நேற்று சென்னையில் இந்திய யூனியன் முஸ்லிம் லீக் தலைவர் அப்துல் சமது (எம். பி), தமிழ்நாடு கிளை கூட்டுச் செயலாளர் காஜா மொய்தீன் (எம்.பி) ஆகியோர் சார்பாக ஒரு விருந்து அளிக்கப்பட்டது.

அப்போது பேசுகையில் பருவா கூறியதாவது:—

"தமிழ்நாட்டில் நடந்த திமுக ஆட்சியில்ஊழல் என்பது நிரந்தர அம்சமாக மாறி விட்டது.

அரசியலில் நல்லவர்கள் தீவிரமாக ஈடுபடாதது இதற்கு காரணம். தமிழ்நாட்டில் தூய்மையான நிர்வாகம் ஏற்படச் செய்வதில் ஜனநாயகம், தூய்மையான நிர்வாகம் ஆகியவற்றில் நம்பிக்கை கொண்டுள்ளவர்கள். ஒன்றுபட்டு ஆராய்ந்து உழைக்க வேண்டும். தமிழகத்தில் இனியும் ஊழல் ஆட்சி ஏற்படாதபடி அவர்கள் பார்த்துக் கொள்ள வேண்டும்.

அரசியலில் நல்லவர்கள் தீவிரமாக ஈடுபடாததற்கு தண்டனையாக கெட்டவர்களின் ஆட்சி கிடைத்தது என்றார் பருவா, சமுதாயத்தில் மைனாரிட்டி உட்பட எல்லா பிரிவினருக்கும் சமத்துவ வாய்ப்புகள் கிடைக்கச் செய்யவேண்டும் என்று பருவா கூறினார்.

சோஷலிச தத்துவத்தை செயல்படுத்துவதில் பிரதமர் இந்திரா தீவிர அக்கறை கொண்டுள்ளதாக அவர் கூறினார்.

## அரிசி, வெங்காயம் விலை குறைவு

கும்பகோணம், பிப். 15—தஞ்சை ஜில்லாவில் சென்ற வாரத்தில் அரிசி விலை இறங்கியுள்ளது.

75 கிலோ கிராம்கொண்ட புழுங்கல் அரிசி மூட்டை ரூ. 125 ஆக இருந்தது. இப்போது விலை ரூ. 10 குறைந்திருக்கிறது. புழுங்கல் அரிசி விலை கிலோ கிராம் ரூ. 2 ஆக இருந்தது ரூ. 1.88 ஆக இறங்கியிருக்கிறது.

வெங்காயத்தின் விலையும் குறைந்திருக்கிறது. சில தினங்களுக்கு முன் ரூ. 45 ஆக இருந்த 60 கிலோ கிராம் மூட்டையின் விலை ரூ. 30க்கு விற்கிறது.

## செக்போஸ்ட்: வெற்றிலை வியாபாரிகள் முறையீடு

சென்னை, பிப். 15—அழுகும் பொருளாக வெற்றிலைக்கு விற்பனை வரியிலிருந்து விலக்களித்திருந்தும் ஆந்திர எல்லையில் உள்ள செக் போஸ்ட்டுகளில் வெற்றிலை லாரிகளை நிறுத்தி தடை செய்வதாக விற்பனை வரி கமிஷனர் செக் போஸ்ட் துணைக் கமிஷனரிடம் வியாபாரிகள் முறையிட்டுள்ளனர்,

தமிழ்நாடு வெற்றிலை வியாபாரிகள் சங்கப் பொதுச் செயலாளர் எஸ். சூரியநாராயணன் அதிகாரிகளை சந்தித்து இதுகுறித்து தெரிவித்தார்.

கவனித்து ஆவன செய்வதாக அவர்கள் உறுதி கூறினர்.

## பாரூக்: காங்கிரசில் இடமில்லை

பாண்டிச்சேரி, பிப். 15—பாண்டிச்சேரி காங்கிரஸ் கட்சியில் முன்னாள் முதல்வர் பாரூக் மரைக்காயருக்கு இடம் இல்லை என்று பாண்டிச்சேரி புது காங்கிரஸ் செயலாளர் சண்முகம் கூறினார். (பாரூக், சமீபத்தில் தி மு க.வை விட்டு விலகினார்).

பாரூக் மரைக்காயர் தலைமையில் இருந்த பாண்டிச்சேரி திமுக அரசு மீது கூறப்பட்டுள்ள ஊழல் புகார்கள் குறித்து விசாரணை நடத்தப்படவேண்டும் என்று சண்முகம் கோரினார். இது சம்பந்தப்பட்ட விவரங்கள் மத்திய அரசுக்கு அனுப்பட்டுள்ளதாகவும் அவர் சொன்னார்.

இணைப்பு மாநாட்டுக்காக சென்னைக்கு பாண்டிச்சேரியிலிருந்து 20 ஆயிரம் பேர் செல்வதாகவும் அவர் கூறினார்.

## தி. மு. க. அரசு மீது குருமூர்த்தி புகார்

சென்னை, பிப். 15—சென்னை இந்து மஜ்தூர் சபை கட்டிடத்தில் நடந்த இணைப்பு காங்கிரஸ் ஊழியர்கள் கூட்டத்தில் குருமூர்த்தி பேசினார்.

சிம்சன் யூனியன் முன்னாள் தலைவர் குருமூர்த்தி பேசுகையில் கூறியதாவது:

சிம்சனில் தி.மு.க. வன்முறை மூலம் தலையிட்ட போதே நான் காமராஜரிடம் அது பற்றி விளக்கினேன்.

அதற்கு காமராஜ் முட்டாள்தனமாக திமுக தலையிடுகிறது. அதனால் அதுதானாகவே அழியும் என்று சொன்னார்.

தி மு க. வுக்கு அன்றுபிடித்த சனியன், கடந்த ஜனவரி 31 வரை நீடித்தது.

இப்போது நாம் எச்சரிக்கையுடன் இருக்கவேண்டும் இன்னொரு பூதம் வரக் காத்திருக்கிறது. 77 தேர்தல் வரப் போகிறது என்பதை நாம் உணரவேண்டும் என்று குருமூர்த்தி பேசினார்.

## தினப்பலன்

'நவமணிஜோதிடர்'

திங்கட்கிழமை

16—2—1976

இராக்ஷஸ ஆண்டு மாசி மாதம் 4-ந் தேதி அமர பட்ச பிரதமை திதி மாலை 7-2 வரை பிறகு துதியை. மகநட்சத்திரம் பகல் 3-23 வரை. பிறகு பூர நட்சத்திரம் மரணயோகம், சித்தயோகம்.

ராகுகாலம் காலை $7\frac{1}{2}$ மணி முதல் 9 மணி வரை.

எமகண்டம் காலை $10\frac{1}{2}$ மணி முதல் 12 மணி வரை. கிழக்கே சூலம்.

நல்ல நேரம் :—

காலை 9 மணி முதல் $10\frac{1}{2}$ மணி வரை. பகல் 12 மணி முதல் 1 மணி வரை. மாலை 6 மணி முதல் $7\frac{1}{2}$ மணி வரை.

தின ராசி பலன்:—

மேஷம்—உற்சாகம்
ரிஷபம்—செலவினங்கள்
மிதுனம்—நண்பர் சேர்க்கை
கடகம்—பிறர் உதவி
சிம்மம்—வேலை வாய்ப்பு
கன்னி—தர்ம சிந்தனை
துலாம—கட்டுப்படுதல்
விருச்சிகம்—எதிர்ப்பு
தனுசு—கடன் தொல்லை
மகரம்—ஆடம்பர செலவு
கும்பம்—கவலை
மீனம்—எதிர்ப்பு அலைச்சல்

## பல்கலைக் கழகத்திற்கு காமராஜ் பெயரிட மார்ட்டின் யோசனை

சென்னை, பிப். 15—மதுரை பல்கலைக் கழகத்திற்கு காமராஜரின் பெயரை வைக்கவேண்டும் என்று காங்கிரஸ் பிரமுகரும் முன்னாள் எம். எல். ஏ யுமான மார்ட்டின் யோசனை கூறினார்.

சாத்தான்குளம், தொகுதி முன்னாள் எம். எல். ஏ., டி. மார்டின் இன்று ஒரு அறிக்கை வெளியிட்டார்.

அந்த அறிக்கையில் அவர் கூறியதாவது:—

தமிழகத்தின் தலை சிறந்த மகனும், பாரத பெருந்தலைவருமான அன்புத் தலைவர் காமராஜ் நினைவாலத்தை திறந்து வைத்து பிரதமர் சொற்பொழிவு ஆற்றுகையில் தலைவர் காமராஜருக்கு அழகிய கட்டிடம் நினைவாலயம் எழுப்பியதில் தாம் மகிழ்ச்சி அடைந்தாலும் அவர் எந்த லட்சியங்களுக்காக கொள்கைகளுக்காக அயராது இறுதி மூச்சுவரை பாடுபட்டாரோ அந்த லட்சியங்களை குறிப்பாக இளைஞர்களின் உள்ளங்களில் பதிய வைத்துக்கொள்வது அவருக்கு நீங்காத அழியாத நினைவுச் சின்னங்களாக இருக்கும் என்று குறிப்பிட்டார். இளைஞர்களுடைய உள்ளங்களில் அந்த பெரியவரின் கொள்கைகளை பதியவைக்கவேண்டுமேயானால் அதற்கான சிறந்த வழி, கல்வி நிறுவனங்கள் மூலமாகத்தான் காணமுடியும். அவர் உயிரோடு இருந்தபோது கல்வியை மிகவும் நேசித்ததோடு எல்லோரும் கல்வி கற்கவேண்டுமென்ற செயல் திட்டத்தையும் முதல் அமைச்சராக இருந்தபோது கொண்டுவந்தார்.

மேலும் அவருடைய அரசியல் சரித்திரத்தில் மதுரை மாநகரம் முக்கிய பங்கினை பெற்றுள்ளது. ஆகவே மதுரை பல்கலைக்கழகத்தை பெருந்தலைவர் காமராஜரின் பெயரில் 'காமராஜ்' பல்கலைக்கழகம் என்று மாற்றுவதன்மூலம் பிரதமரின் வேண்டுகோளையும் ஆசையையும் நிறைவேற்ற முடியும் என்று மார்டின் தெரிவித்தார்.

## காங்கிரஸ் இணைப்பு வியாபாரிகள் ஆதரவு

சென்னை, பிப். 15—இரு காங்கிரஸ் இணைப்புக்கு தேசிய வியாபாரிகள் ஆதரவு தெரிவித்துள்ளனர். தமிழ்நாடு தேசிய வியாபாரிகள் செயல் கமிட்டியின் கூட்டம் எஸ். சூரியநாராயணன் தலைமையிலும், ஆர். ராமசாமியின் முன்னிலையிலும் நடைபெற்றது. ஸ்தாபன காங்கிரசை சேர்ந்த வியாபாரிகளும் கலந்து கொண்டார்கள். பிரதமர் இந்திரா காந்தியின் இருபது அம்ச திட்டத்தை வரவேற்றும் இரு காங்கிரசின் இணைப்பை ஆதரித்தும் தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன.

## மதுவிலக்கு: 631 பேர் கைது

சென்னை, பிப். 15—மது விலக்குச் சட்டத்தை மீறியதாக கடந்த வாரத்தில் சென்னை நகரில் 631 பேர் கைது செய்யப்பட்டனர்.

சினிமா டிக்கெட்டை கள்ள மார்க்கெட்டில் விற்றதாக 15 வழக்குகள் தொடரப்பட்டுள்ளன.

விபசாரச்சட்டத்தின் கீழ் 9 அழகிகளும், 3 பெண் தரகர்களும் கைது செய்யப்பட்டுள்ளனர்.

## திராவிடர் கழக பிரமுகர் விலகல்

சேலம், பிப். 15—திராவிடர் கழகத்தின் நடைமுறைகள் பிடிக்காததால் அதிலிருந்து தான் விலகிக் கொள்வதாக குமரகிரிப் பேட்டை திராவிடர் கழகத் தலைவர் ஆர். கே. பழனிசாமி தெரிவித்துள்ளார்.

காங்கிரஸ் இணைப்பு மாநாடு

# ஊழல் இல்லாத ஆட்சி அமைப்போம் மந்திரி சி. எஸ். செய்தி

சென்னை, பிப். 15—தமிழ் நாட்டில் ஊழல் இல்லாத ஆட்சியை அமைக்கப் பாடுபடுவோம் என்று மத்திய நிதி மந்திரி சி. சுப்பிரமணியம் கூறினார்.

இன்று மாலை சென்னையில் நடக்கிற இணைப்பு மகாநாட்டையொட்டி அவர் ஒரு செய்தியை விடுத்தார்.

மத்திய மந்திரி சி. சுப்பிரமணயம் கூறியதாவது:—

'தமிழ்நாட்டின் காங்கிரஸ் கட்சிக்கு இந்த இணைப்புதினம் வரலாற்று முக்கியத்துவம் வாய்ந்த தினமாகும். தமிழ்நாட்டு மக்களின் நலத்தை மனத்தில் கொண்டுள்ள அனைவரும் மகிழக் கூடிய தினமாக இது இருக்கிறது.

"இந்த நிகழ்ச்சியின்போது இக்கட்சியுடன் நாற்பது ஆண்டுகளுக்கு மேல் தீவிரமாக இணைந்துள்ள எனது வாழ்வைத் திரும்பிப் பார்க்கிறேன்; அதன் பல சாதனைகளைப் பெருமையுடன் நினைவு கொள்கிறேன். ஆனால், அதன் சிறு பிழைகளையும் நான் உணர்கிறேன,

அதன் வெற்றிகளிலும், பிற்போக்கு மாறுதல்களிலும் நான் பங்கெடுத்துள்ளேன். மிக மோசமான பிற்போக்கு நிலை, 1967 பொதுத் தேர்தலின்போது வந்தது; அப்பொழுது தமிழ்நாட்டு மக்களின் தேர்தல் ஆணையை நாம் இழந்து விட்டோம்.

### மறைவான ஆசீர் வாதம்

ஒரு விதத்தில், மறைவான ஆசிர்வாதமாக அதுஉள்ளது. ஏனெனில் மற்றொரு அரசியல் கட்சியின திறமைகளை எடைபோட, மக்களுக்கு ஒரு வாய்ப்பை அது கொடுத்தது. நமது பெருகிய பலத்தின் நம்பிக்கையுடனும், தனித்தன்மை கொண்ட நமது கடமை உணர்வுடனும் காங்கிரசிலுள்ள நாம் இன்று முன்னேற்றப் பாதையில் நடை பயிலுகிறோம்,

ஜனநாயகம் என்ற உறுதியான அடிப்படையில், மதசார்பின்மை, பொதுவுடைமை, தேசிய ஒருங்கிணைப்பு ஆகிய கொள்கைகளைக்கொண்ட நமது கட்சி மட்டுமே கஷ்டத்துடன் வெற்றிகொண்ட நமது சுதந்திரத்தைப் பாதுகாக்க முடியும், தேசத்தில் நெருக்கடி நிலையைப் பிரகடனப்படுத்துவதற்கு வழிகோலிய தொடர்ச்சியான நிகழ்ச்சிகளும், அதன் பின்னர் காணப்படும் அபிவிருத்தியும் இந்த அடிப்படை உண்மையை அடிக் கோடிட்டு விளக்கும்,

"நெருக்கடிநிலைப் பிரகடனம், தமிழ்நாட்டில் ஜனாதிபதி ஆட்சி ஏற்பட்டது. கட்சியின் மறு இணைப்பு ஆகியவை உண்மையில் மிகமுக்கியமான நிகழ்ச்சிகளாகும் அவை புதிய சவால்களைத் தோற்றுவிக்கின்றன; அதே சமயத்தில் புதிய வாய்ப்புக்களையும் அளிக்கின்றன.

### காமராஜரின் உதாரணம்

இந்த நெருக்கடி நேரத்தில் மறுபடியும் நம்முடன் இணையும். முந்தைய ஆண்டு நண்பர்களுக்கும் சக ஊழியர்களுக்கும் எனது இயதபூர்வமான வரவேற்பை அளிக்கிறேன். காலம்சென்ற எனது தலைவர் காமராஜரின் நினைவுக்கு எனது மரியாதை மிக்க அஞ்சலியைச் சமர்ப்பிக்கிறேன்; நமது வருங்கால நடவடிக்கைகளில் அவரின் எழுச்சிமிக்க உதாரணம் நமக்குத் தொடர்ந்து வழிகாட்டுவதற்குப் பிரார்த்திக்கிறேன்.

'இந்த மாநிலத்தில் நம்மை சந்திக்கும் புதிய பணிகளுக்கு நம்மை நாமே தயார்படுத்திக் கொள்வதினால், நமது நிலை, தி. மு. க. வின் எதிர்ப்பாக மட்டும் இருப்பதில் திருப்தியடைந்து எதிர்மாறாக இருக்காது. அக்கட்சியின் கணக்கற்ற தவறான செயல்களையும், அக்கட்சி நடத்திய நிர்வாகத்திலிருந்த தவறுகளையும் சந்தேகமில்லாமல் நாம் வெளிப்படுத்துவோம்.

ஆனால், நல்ல பாடங்களை நாமும் ஏற்றுக் கொள்வோம். அதிகாரம், தனிச் சலுகைப் பெற்றவர்களின் உத்தரவுகளினால் ஏற்படும் மனம்போனவாறுள்ள தலையீடு அல்லது ஊழலிலிருந்து விடுபட்ட ஒரு நிர்வாகத்தை அமைப்பதற்கு நாம் ஆக்கபூர்வமாக உழைப்போம். போதனை, செயல் ஆகிய இரண்டிலும், மக்களுக்கு தன்னலமற்ற சேவை புரியும் உண்மையான காந்தி பாரம்பரியம் என்னும் தகுதியை நிரூபிக்க நாம் முயற்சி செய்வோம்" என்றார் சுப்பிரமணியம்.

## சிவாஜி முயற்சியால் 40வரவேற்பு வளைவுகள்

சென்னை, பிப். 15—இன்று (15-ந் தேதி) மாலை சென்னை கடற்கரையில் காந்தி சிலைக்கு அருகே நடக்கவிருக்கிற இரு காங்கிரஸ் இணைப்பு மாநாட்டையொட்டி, சென்னை நகரை ஏராளமான வரவேற்பு வளைவுகள் அழகு படுத்துகின்றன

விளம்பர நிறுவனங்கள். சினிமா கம்பெனிகள் முதலியவைகளின் ஒத்துழைப்புடன் சிவாஜிகணேசன் மேற்கொண்ட முயற்சி காரணமாக இவற்றில் 40 க்கு மேற்பட்ட வரவேற்பு வளைவுகள். கண்ணைக்கவரும் முறையில் முக்கிய இடங்களில் அமைக்கப்பட்டுள்ளன.

தனியார் நிறுவனங்கள், தொழிற்சங்கங்கள் ஆகியவைகளின் ஆதரவிலும் ஏராளமான வரவேற்பு வளைவுகள் அமைக்கப்பட்டுள்ளன.

## சிதம்பரம் ஆலயத்தை புதுப்பிக்க முடிவு

சிதம்பரம், பிப். 15—சிதம்பரம் நடராஜர் ஆலயத்தில் உள்ள நான்கு கோபுரங்களையும் புதுப்பிக்க கோவிலின் திருப்பணிக் கமிட்டி முடிவு செய்துள்ளது.

தில்லைக் கோவில் திருப்பணிக்கான விழா நடைபெற்றது. திருப்பணிக் கமிட்டியின் உப தலைவர் டாக்டர் ரத்னவேல் சுப்பிரமணியம், டாக்டர் கே. அரங்கசாமி பிள்ளை, டாக்டர் நடராஜ பிள்ளை, கே. சிவகுமார், ஜி. வாகீசம் பிள்ளை, கே. சுவாமிநாதன் ஆகியோர் கலந்து கொண்டனர்.

## லே-ஆப் காலத்துக்கு நஷ்ட ஈடு: சுப்ரீம் கோர்ட் தீர்ப்பு

புதுடெல்லி, பிப். 15—ஓர் நிறுவனத்தின் நிரந்தர உத்தரவுகளோ அல்லது ஊழியர்ன் வேலை நிபந்தனைகளோ ஒரு தொழிலதிபருக்கு லேஆப் கொடுக்க அதிகாரம் அளிக்கவில்லை என்றால் லே-ஆப் அளிக்கப்பட்ட காலத்துக்கு அத்தொழில் அதிபர் நஷ்டஈடு அளித்தாகவேண்டும் சுப்ரீம் கோர்ட் அளித்த ஒரு தீர்ப்பில் மேற்கண்டவாறு கூறியிருக்கிறது.

சாதாரணமாக லே-ஆப் கொடுக்கப்பட்ட காலத்துக்கு அந்தத்தொழிலாளர்களின் முழு ஊதியத்தை அளிப்பதே தொழிலதிபர் அளிக்க வேண்டிய நஷ்டஈட்டுத் தொகையாக இருக்கும் என்றும நீதிமன்றம் கூறியுள்ளது.

வி. ஆர். கிருஷ்ண அய்யர், என். எல். உண்ட்வாலியா ஆகிய இரு நீதிபதிகளையும் கொண்ட டிவிஷன் பெஞ்சு இந்தத் தீர்ப்பை அளித்தது.

பயர்ஸ்டோன் டயர் அண்டு ரப்பர் கம்பெனியின் டெல்லி சென்னை காரியாலயங்களைச் சேர்ந்த தொழிலாளர்கள் தாக்கல் செய்த இரண்டு அப்பீல்களை அவர்கள் ஏற்றனர். எவ்வளவு தொகை தொழில் அதிபர் செலுத்தவேண்டுமென்பதை தொழிலாளர் கோர்ட் தீர்ப்பளிப்பதற்காக சென்னை தொழிலாளர்வழக்கை அங்கு அவர்கள் அனுப்பியிருக்கிறார்கள்.

நிர்வாகத்தினருடன் ஏற்கனவே ஓர் உடன்பாட்டுக்கு வந்துள்ள தொழிலாளர்கள் விஷயத்தை தங்கள் தீர்ப்பு பாதிக்காது என்றும் நீதிபதிகள் தங்கள் தீர்ப்பில் கூறியிருக்கிறார்கள்.

கல்லூரி மாணவர்களுக்கு

இந்திரா அறிவுரை

# "உள்ளத்திலிருந்து கட்டுப்பாடு உருவாக வேண்டும்"

சென்னை, பிப், 15—கட்டுப்பாடு அவரவர் உள்ளத்திலிருந்து உருவாக வேண்டும் என்று பிரதமர் இந்திரா கூறினார்.

புதுக்கல்லூரியில் புது நிர்வாகக் கட்டிடத்தை பிரதமர் நேற்று திறந்து வைத்தார்.

கூட்டத்தில் ஏராளமான மாணவர்களும், கல்வியாளர்களும் கலந்து கொண்டனர்.

பிரதமர் பேசும் போது கூறியதாவது:—

கட்டுப்பாடு என்பது அவரவர் உள்ளத்திலிருந்தே வரவேண்டும் என்று நான் கருதுகிறேன். அதை வேறு எங்கிருந்தாவது நுழைக்கமுடியாது. ஆனால் நம் நாட்டில் கட்டுப்பாடு இல்லாமல் நடப்பது என்பது ஒரு நாகரீகமாக வளர்ந்துவிட்டது.

யாராவது கட்டுப்பாட்டோடு நடந்தால் அவர்கள் அரசாங்கத்தின் ஆதரவாளர் என்று அழைக்கபபட்டனர். அரசாங்கத்துக்காக வேலை செய்பவர்களைகையாலாகாதவன் தைரியமில்லாதவன் என்றெல்லாம் அழைக்கஆரம்பித்தனர்.

ஆயினும் இதைப்பற்றியெல்லாம் முதலில் நாம் கவலைப்படவில்லை. ஏதோ ஒரு கட்சிக்கோ தனிப்பட்டவர்களுக்கோ எதிரானது என்று நினைத்துவந்தோம். இதன் இறுதி விளைவு, நாட்டின் மொத்த முன்னேற்றத்தையே பாதித்துவிட்டது. ஏழைகள் நலன். சிறுபான்மையினர் பாதுகாப்பு எல்லாமே இதனால் சீர்குலைந்தது.

இந்த நிலைமையைப் போக்கவே கடும் நடவடிக்கை எடுக்க வேண்டியதாயிற்று.

எனக்கு தொண்டர்கள் வேண்டும் என்று நான் விரும்பவில்லை. உறுதியாக முன்னேறும் மக்கள் தான் இன்றைய தேவை.

இந்தியா போன்ற ஒரு பெரிய நாட்டில் தலைவர்களை உருவாக்க வேண்டும்.

ஆனால் தலைவர்கள் திட்டமிட்ட சேவைகளால் வரவேண்டும். அழிவிலிருந்து உருவாகக் கூடாது.

தகுந்த நேரத்தில் தகுந்த முடிவுகளை எடுப்பவர்களாக அவர்கள் திகழ வேண்டும் என்று இந்திரா பேசினார்.

ஆரம்பத்தில் கல்லூரி தாளாளர் பஷீர் வரவேற்புரை வாசித்தளித்தார்.

பிரதமரின் 20 அம்சத் திட்டத்துக்கு கல்லூரி சார்பில் ஆதரவு தெரிவிக்கப்பட்டது.

நிர்வாகக் கமிட்டி தலைவர் அப்துஸ்சமது பேசுகையில் ரூ. 1 கோடி செலவில் ஆஸ்பத்திரி, தொழிற் பயிற்சிப் பள்ளி ஆகியவைகளை ஆரம்பிக்க இருப்பதாக தெரிவித்தார்.

கல்லூரித் தலைவர் மொகிதீன் நன்றி கூறினார்.

1951ல் 150 மாணவர்களுடன் ஆரம்பிக்கப்பட்ட இந்தக் கல்லூரியில் இன்று சுமார் 3 ஆயிரத்து 600 மாணவர்கள் கல்வி கற்கிறார்கள்.

வெளிநாடுகள் பல வற்றிலிருந்தும் மாணவர்கள் வந்து படிக்கின்றனர்.

நிகழ்ச்சிக்கு கவர்னர் ஷா, உள்துறை அமைச்சர் பிரம்மானந்த ரெட்டி. உள்துறை துணை அமைச்சர் ஓம்மேத்தா ஏ. சி, ஜார்ஜ், பருவா மற்றும் பலர் கலந்துகொண்டனர்.

## தி.மு.க.வுக்கு மற்றொரு எம். பி. முழுக்கு

புதுடெல்லி, பிப். 15—திமுக வுக்கு மேலும் ஒரு எம். பி. முழுக்குப் போட்டார். இவரது பெயர் கே. வீரய்யா. புதுக்கோட்டை நகரசபைத் தலைவராகவும் இவர் இருந்து வருகிறார்.

அவர் வெளியிட்டுள்ள அறிக்கை ஒன்றில் அவசரநிலைப் பிரகடனம் சம்பந்தமாக தி மு க தலைமை எடுத்துக்கொண்ட முடிவுகள் தமக்கு உடன்பாடானதல்ல என்று கூறியிருக்கிறார்,

நமது நாட்டுக்கு தற்போதைய தேவை ஒழுங்கும் கட்டுப்பாடும் தான் என்று வீரய்யா கூறினார்.

திமுகவிலிருந்து தாம் ராஜினாமா செய்த விவரத்தை மக்கள்சபை சபாநாயகருக்கு எழுதியிருப்பதாகவும் தமக்கு சுயேச்சையாளர் பகுதியில் இடம் ஒதுக்குமாறு கோரியிருப்பதாகவும் அவர் தெரிவித்தார்.

## 12 கவுன்சிலர்கள் காங்கிரசில் சேர்ந்தனர்

ராஜபாளையம், பிப. 15—ராமநாதபுரம் மாவட்ட ராமச்சந்திரன் கட்சி துணைத் தலைவர் அம்மண்ண ராஜாவும், நகர கமிட்டித் துணைத் தலைவர் ரங்கராஜனும 12 கவுன்சிலர்களுடன் காங்கிரஸ் கட்சியில் சேர்ந்தனர்.

சிவாஜி கணேசனுக்கு அளிக்கப்பட்ட வரவேற்புக் கூட்டத்தில் இவர்கள் காங்கிரசில் சேர்ந்தனர்.

சமயநல்லூரைச் சேர்ந்த 1800 காங்கிரஸ் தொண்டர்கள் காங்கிரஸ் இணைப்புக்கு தங்கள் ஆதரவைத் தெரிவித்தனர்.

கூட்டத்தில் பேசிய பலரும் சிவாஜி கணேசன் தலைமைப் பொறுப்பை ஏற்கவேண்டும் என்று கூறினர்.

# இந்து முறையில் அமெரிக்கர் திருமணம்

பம்பாய், பிப். 15—அமெரிக்க டாக்டர்கள் 32 பேர் நியூயார்க்கில்இந்து முறையில் திருமணம் செய்து கொண்டுள்ளனர்.

இந்தத் தகவலை சாமிஜக தீஸ்வர் ஆனந்ஜி என்பவர் பம்பாயில் தெரிவித்தார்.

நியூயார்க்கில் உள்ள கீதா ஆசிரமத்தின் தலைவராக இவர் இருக்கிறார்.

அந்த ஆசிரமத்தில் தான் இந்தத்திருமணம் நடந்தது.

இந்தியாவில் இருந்து கிருஷ்ணன், ராதை. லட்சுமி, துர்கா. ஹனுமான் மற்றும் கடவுள்களின் சிலைகளை மார்பிள் கல்லில் செய்து எடுத்துச்செல்வதற்காக இவர் இந்தியா வந்திருக்கிறார் இவைகள் ஆசிரமத்தில் நிறுவப்படும்.

குருநானக்கின் சிலையும் எடுத்துச் செல்லப்படும். அமெரிக்காவில் 45 ஆயிரம் இந்துக்கள் இருப்பதாகவும், இந்து அமெரிக்கர்கள் பலர் திருமணம போன்ற நிகழ்ச்சிகளை ஆசிரமத்தில் நடத்துகிறார்கள் என்றும சாமிஜி தெரிவித்தார்.

# திரை உலகம்

## உனக்காக நான்

விமர்சனம்

நண்பர்கள் என்றால் எப்படி இருக்க வேண்டும்? நட்புக்கு இலக்கணம் என்ன?

'உனக்காக நான்' - இது பதில் மட்டுமல்ல, படத்தின் பெயரும் கூட - பொறுத்தமான பெயர்!

''பன்னீரென்றாலும்
கண்ணீரென்றாலும்
உன்னை நானுக நினைப்பேன்
பள்ளம் என்றாலும்,
மலைக்கே சென்றாலும்
உன்னை என்னோடு
அணைப்பேன்''

—இப்படி ஒருவன் ராமு!

''மாலை கொண்டாலும்
மணநாள் வந்தாலும்
நாளை உன்னோடு கழிப்பேன்
பாதை ஒன்ருக
பார்வை ஒன்ருக
வாழ்வை உன்னோடு
இணைப்பேன்''

—இன்னொருவன் ராஜா!

இருவரது நட்பையும்பிரிக்க எத்தனையோ சோதனைகள். தந்தையின் மில் உரிமையை ஏற்கும் ராஜாவுக்கு தொழிற் சங்கத் தலைவரால் தலைகுனிவு ஏற்படுகிறது. வணங்கா முடியாக இருந்த அவன். இதனுல் குமுறுகிருன். பழிக்குப்பழி வாங்கத் துடிக்கிருன். நண்பர் ராமு அவனை அமைதிப்படுத்தி விட்டு அதற்காகத் திட்டம் தீட்டுகிருன். நண்பனின் மில்லில் சாதாரணத்தொழிலாளியாகச் சேருகிருன், தொழிலாளர்களைக் கவர்வதற்கு என்னென்ன வேஷம் போடலாம். எப்படி அவர்களை தன் வலையில் வீழ்த்தலாம் என்ற சூழ்ச்சி அவனுக்கு நன்ருகத் தெரிந்திருக்கிறது. வெகுவிரைவில் தொழிலாளர்களுக்காகவே வாழும் உண்மையான தலைவன் பதவியிலிருந்து இறக்கப்படுகிருன், போலிக்கு பதவி கிடைக்கிறது. நண்பனுக்காக தொழிலாளி வேஷம் போட்ட ராமு, தொழிலாளர்களுடன் பழகப் பழக அவர்களுடைய வறுமையையும், வாட்டத்தையும், கஷ்டங்களையும் புரிந்து கொள்கிருன். ஏழ்மை, இல்லாமை, துன்பம் அவனுக்குத் தெரிகிறது—தெளிவேற்படுகிறது.

போலியாக வந்தவன் அசலாகிருன். தொழிலாளர்களுக்காக நண்பனிடம் வாதாடுகிருன். ராஜாவுக்கு அதிர்ச்சி-தன் நண்பன் மாறிவிட்டானென்று ராஜாவின் தந்தை ராமுவை ஒழித்துக் கட்டத் திட்டம் தீட்டுகிருர்.

நண்பர்கள் பிரிந்திருந்தாலும், நினைவால் ஒன்றியிருக்கின்றனர், தனது செல்வம், செல்வாக்கு எல்லாவற்றையும் மறந்துவிட்டு நண்பன் ராமுவிடம் ராஜா ஓடும் காலம் வருகிறது. அதற்குள் அவனே...?

''உனக்காக நான்'' படத்தின் கதை. இப்படித் துடிப்போடு ஆரம்பமாகிறது.

### சிவாஜி ராஜா

சிறைக் கதவுகள் திறக்கப்படுகின்றன. கண்ணுடி அணிந்துச் சால்வையைப்போர்த்திய படி அமைதியே உருவாக மெல்ல வெளியே வந்து, வார்த்தைகளில் குறைவாகவும், கண்களினுல் அதிகமாகவும் பேசுபவர் சிவாஜி.

அடுத்த காட்சியிலேயே பெரும் மாற்றம். ஆடம்பரமாக, ஆர்ப்பாட்டமாக நடந்துவரும் நடை, துள்ளல், குறும்பு இவைகள் 'அவரா இவர்' என்று அதிசயிக்க வைக்கிறது.

மீண்டும் ஒரு மாறுதல்! மன்னிப்புக் கேட்கச் சொல்லும் தந்தையிடம் குமுறுவது, அதன்பின் குமுறுவது, அடிபட்ட புலிபோல் துடிப்பது அருமை!

அடிபட்டுக் கிடக்கும் நண்பனைப் பார்த்துவிட்டு, 'எவனாவது தொட்டால் தொலைத்து விடுவேன்' என்று தொழிலாளர்களிடம் கர்ஜிப்பது, ராமுவுக்கு ஏதாவது ஒன்றுஎன்ருல்தொலைத்து விடுவேன் என்று தந்தையிடமே மோதுவது அற்புதம்!

'பெற்ற பிள்ளை சாப்பிடாததே எட்டு நாட்களுக்குப் பின்தான் தெரிந் தந்தைக்கு திருக்கிறது. தொழிலாளி நிலை எப்படித் தெரியும்!? என்று கேட்கும் இடம் முதல் தரம்!

அருவியாக, அமைதியான நதியாக பொங்கும் கடலாக, புயலாக எரிமலையாக பல் வேறு உணர்ச்சிகளைக்கொட்டி சிவாஜி (கணேசன்) ராஜாவாக நடித்திருக்கிருச்.

வக்கீலிடம் பேசிக் கொண்டே டைப்பிஸ்ட் படத்தை வரைவது, வெளியில் சென்று நண்பனை அழைப்பது அப்பப்பா...என்ன குறும்பு!

நண்பனிடம் கோபமாக இருக்கும்போது, ஊரிலிருந்து லட்டு வந்ததென்று அவன் கொடுக்க, அதை வாங்கிக் கொண்டு, அவனது தாயையும், தங்கையையும் தன் தாயாகவும் தங்கையாகவும் கூறி ராமுவிடம் கோபிக்கும் இடத்தில் என்ன அழுத்தம்... உருக்கம்!

நெற்றிக்கு திலகம் அழகூட்டுவதுபோல் படத்தின் வெற்றிக்கு திலகமாக இருப்பது நடிகர் திலகத்தின் நடிப்பு!

### ஜெமினி கணேசன்

'பாசமலர்' போன்ற பல படங்களில் சிவாஜி கணேசனுடன் இணைந்துநடித்தஜெமினி கணேசன் பல ஆண்டுகளுக்கு மீண்டும் இந்தப் படத்தில் இணைந்துள்ளார். சமமாக வாய்ப்பு கிடைத்துள்ளது. நண்பனுக்கும், தொழிலாளர்களுக்கும இடையில் 'யாருக்காக நான்' என்று தவிக்கும் வகையில் புதுமையான கதாபாத்திரத்தை அவர் ஏற்றுள்ளார். தொழிலாளர்களிடம் அடிவாங்கிக் கொண்டு, தலைவரிடம் தன்னைப் பற்றி உண்மையைக் கூறும் இடத்திலும், குடித்துவிட்டு கைவிரல்கள் சிக்கிக்கொண்டதாக நிர்மலா விடம்சொல்லும் போதும் மற்றும் பல காட்சிகளில் அருமையாக நடித்திருக்கிருர்.

### நாகேஷ்

மூன்றே காட்சிகளில் இடம் பெற்ருலும், மனதைத் தொட்டு உலுக்கிவிடுகிருர் நாகேஷ். அண்மையில் அபூர்வராகங்கள்' படத்தில் குடிகாராக வந்து நிழலோடு பேசி, 'சியர்ஸ்' சொல்லி பாட்டிலை சுவரில் மோதி நம்மைக் குலுங்கக் குலுங்க சிரிக்கவைத்த அதே நாகேஷ் தான். ஆனுல், அதற்கும், இதற்கும்தான் எவ்வளவுவித்தியாசம்!

''காணிநிலம் வேணும்பராசக்தின்னு பாடினுன் பாரதி, ஆனுல், அவன்பார்க்கவில்லை'' என்கின்ற போதும். நோய்க் கிருமிகளுக்கு தன் உடலைக் கொடுத்திருப்பதாகக் கூறும் போதும், மரணப் படுக்கையில் இருக்கும் போது நண்பனைப்பாடுமாறு கூறிவிட்டு அதை அனுபவிக்கும் காட்சியில் அருமையாக நடித்திருக்கிருர்.

''இறைவன் இங்கே வரவில்லை எனவே நான் அங்கு போகிறேன்'' என்ற வரிகளுக்கு நாகேஷ் முகப்பாவம் நம்மை உருக்கிவிடுகிறது. (மரணத்தின் கோரப்பிடியிலிருந்து இந்த அற்புதக் கலைஞனை விடுவித்த ஆண்டவனுக்கு மனதிற்குள்ளேயே நன்றி சொல்லிக் கொள்கிருேம்.)

லட்சுமி வெண்ணிற ஆடை நிர்மலா இருவரும் கதாநாயகிகள். நடிப்பதற்குப் போதிய சந்தர்ப்பம் இல்லை---என்ருலும் குறையில்லை!

வி. கே. ராமசாமி மகேந்திரன், மனோரமா நகைச்சுவை எடுப்பாக இல்லாவிட்டாலும் எடுபடுகிறது.

எஸ. வி. சுப்பையா, மேஜர்சுந்தர் ராஜன், எஸ. வி. ராமதாஸ், பேபி இந்திரா, குமுதினி, டைப்பிஸ்ட் கோபு மனோகா ஆகியோர் குறையின்றி நடித்துள்ளனர். வீனுதாஸ்கவர்ச்சியாக நடனமாடியுள்ளார்.

பாலாஜி பணத்தைத் திருப்பிக்கொடுத்துவிட்டு, ''ராமுவைக்காப்பாற்றுங்கள்' என்று ராஜாவிடம் கூறுமிடத்தில் நன்கு நடித்துள்ளார்.

### வசனம்

''உங்களுக்குப் பொழுது போக்குவதற்கு பொம்மையாக இருப்பதை விட பிறருக்கு நன்மையாக இருக்கக கூடாதா?''

''ஏழை கஞ்சியைக் குடிச்சாலும் உண்மையைப் பேசுவான். பணக்காரன் தண்ணி போட்டாத்தான் உண்மையைச் சொல்வான்''

''நான் பாட்டிலில் செத்ததாக யாரும் சொல்லக் கூடாது. பாட்டினுல் செத்ததாகச் சொல்ல வேண்டும்''

இப்படி படம் முழுவது கருத்துக் குவியல்கள், எண்ணக் கனிகள் வசனங்களாக வலம் வருகின்றன. ஏழை, பணக்காரன், நடுத்தா வர்க்கம் குறித்து முதலாளி ஒருவனின் கருத்து எப்படி இருக்கும் என்கின்றவசனம் அருமை ஏ. எல். நாராயணன் சிறப்பாக உரையாடல் எழுதியுள்ளார்.

கவிஞர் கண்ணதாசனின் 'இறைவன் உலகத்தைப் படைத்தானும்' பாடல் கருத்து இதயத்தில் நிறைகிறது. அவரது பாடல்கள் யாவும் விஸ்வநாதன் இசையமைப்பால் இனிமையாக ஒலிக்கின்றன.

மஸ்தான் ஒளிப்பதிவு தரமாக உள்ளது.

### டைரக்ஷன்

விறுவிறுப்பு குறையாமல் கடைசி வரையில் படத்தை சி. வி. ராஜேந்திரன் திறம்பட இயக்கியுள்ளார். முன்னணிக் கலைஞர்களின் திறமையை நன்கு பயன்படுத்திக் கொண்டிருக்கிருர். சில இடங்களில் இந்திப் படத்தின் சாயல் தென்படுவதைத் தவிர்த்திருக்கலாம்

பொழுது போக்கு அம்சங்கள் மட்டுமின்றி, பொழுதை பயனுள்ளதாக ஆக்குவதற்கு தேவையான நல்ல அம்சங்களுடன் சி. வி. ராஜேந்திரன் படத்தை உருவாக்கியுள்ளார் பாலாஜிக்கு மற்றுமொரு வெற்றிப்படமாக இது அமையும் என்று நம்பலாம்.

மொத்தத்தில்—
'உனக்காக நான்'—
உங்களுக்காகத்தான்!

—நாகை தருமன்

''உத்தமன்'' வண்ணப் படத்தில் சிவாஜி கணேசன், மாஸ்டர் டிட்டோ.

## மனோரமாவுக்கு எம். ஆர். ராதா எதிர்ப்பு

ரங்கூனின் கணக்கிலடங்காத நாடகங்களில் நடித்து புகழ்பெற்ற ரங்கூன் கமலம் ஒரு செட்டியாரை காதலித்து அவரையே கணவனுக ஏற்றுக் கொண்டு வாழ்ந்தார்.

செட்டியார் இறக்கும் தருவாயில் மனோரமாவிடம் தன்னுடைய மகன் அருண் சோ) தன் சமையல்காரன் மகன் வைத்தி (சுருளிராஜன்) தன் கணக்குபிள்ளை மகன் அளந்து டி. கே. எஸ். சந்திரன்) இவர்களுக்கு முறையே தன் ஆதரவில் வளர்ந்து அனுதை பெண்களான அலமேலு தீபா, வேதா, சச்சு மீனுட்சி புதுமுகம் கிரிஜா தேவி இவர்களுக்கு திருமணம் செய்து வைக்க வேண்டும் என்று மனோரமாவிடம் சத்தியம் பெற்றுஉயிர் விடுகிருர்.

இதற்காக ரங்கூனிலிருந்து கண்டனூர் வருகிருர் கமலம். இதை கேள்விப்பட ஊர் பெரியவர்கள் எம். ஆர். ராதாவும். வாசுவும் மணமகன் தாயார்களிடம் கமலத்தை எதிர்க்க ஏற்பாடு செய்கிருர்.

''கூத்தாடி குடும்பத்தை கெடுப்பான்னு சொல்லுவாங்க, அதனுலே அந்தரங்கூன் நாடகக்காரி கமலம் இந்த குடும்பத்தை பிரிக்க வருகிருள். எல்லோரும் ஜாக்கிரதையாக இருங்க. அவளை ஊருக்குள்ளே நுழையவிடாதீர்கள்'' என்று ஊரிலுள்ள எல்லோரையும் பயமுறுத்தி வைக்கிருர். ராதாவும், வாசுவும், இதைக் கேட்டு மணமகனின் தாயார்கள், கமலம் ஊருக்குள் வரக்கூடாது என்று எதிர்க்கிருர்கள். ரங்கூனில் இருந்து வந்த கமலத்திடம், ''நாடகக்காரி ஆட்டமெல்லாம் அவங்க குடும்பத்தோடு நீக்கணும். கமலம்மா நீ செட்டியாருக்கு ஒட்டினவளோ கட்டினவளோ உன் வரையிலும், உன்பிள்ளை வரையிலும் வச்சுக்கோ இந்த பிள்ளைகளுக்கு பெண் பார்க்க நீ யாரு'' என்று மணமகனின் தாயார்கள் கேட்கிருர்கள்.

கமலம் அமைதியுடன் ''நான் யாரோ. தனக்கிட்டே ஊழியம் பண்றவர்களாக இருந்தாலும் அவங்களையும் தன் குடும்பமா நினைச்சு அவங்க புள்ளைங்களை தன் பிள்ளையா நினைச்சு உங்க பிள்ளைங்களை காலேஜ் வரைக்கும் படிக்க வைச்சாரே அவர் யாரு. யாருக்கோ பிறந்த உங்களுடைய வாழ்க்கையை பார்த்தாரே அந்தச் செட்டியாரின் வாக்கை காப்பாத்த வந்திருக்கிறேன். என்னமோ நாடகக்காரின்னு இளக்காரமா பேசுறீங்களே. பொறந்த அத்தனை பொம்பளைங்களும் நாடகக்காரி தாண்டி, கட்டினவனுக்கும், பெத்தவங்களுக்கு தகுந்த மாதிரி ஆடுறுங்களே அத்தனை பேரும் நாடகக்காரிதான். பாரதத்திலே கர்ணனை பெத்த குந்தி தேவியே கர்ணு நான் உன்னை சுமந்தவள் என பக்கம் வந்திடுன்னு. ஆனு கர்ணன் தின்ன சோத்தைநினைச்சான். சாகிறவரைக்கும் தன்னை வாழ வைத்தவன் பக்கமே நின்ருன். அதற்கு பேர்தான் நன்றி. இந்த நாடகக்காரி இரங்கூன்கமலம்இந்த குடும்பத்தை நல்ல வழியில் வாழ வழி செய்கிறேனு இல்லையா பாருங்கள்'' என்று சபதம் செய்கிருள்.

இக்காட்சி 'பிரண்ட்ஸ் மூவீஸ்' 'ரங்கூன் கமலம்' படத்திற்காக வாகினியில்படமாக்கப்பட்டது.

இப்படத்தில் ரங்கூன் கமலமாக மனோரமா நடித்து வருகிருர். தீபா, ஏ.சகுந்தலா சச்சு, புதுமுகங்கள் கிரிஜா தேவி, பல்லவி, விஜயகீதா, ஜெயகீதா, தாம்பரம் லலிதா புஷ்பமாலா எம். ஆர். ராதா சோ, டி. கே. எஸ். சந்திரன், கே. ஏ. தங்கவேலு. சுருளி ராஜன், எம்.ஆர்.ஆர். வாசு வி. கே. ராமசாமி நாகேஷ் தேங்காய் சீனிவாசன், அசோகன் மூர்த்தி, வி. கோபாலகிருஷ்ணன், ஐ. எஸ். ஆர். எம். ஆர். கிருஷ்ணசாமி, ராமராவ், ஒருவிரல கிருஷ்ணராவ், உடையப்பா ஆகியோர் நடிக்கிருர்கள்.

ஆளம் பட்டதாரிகள் தயாரித்துவரும் இப்படத்தின் கதை, வசனத்தை ஏ. எல். நாராயணன் எழுதியுள்ளார். கண்ணதாசன், வாலி, ஆலங்குடி சோமு பாடல்களுககு விஜயபாஸ்கர் இசையமைக்கிருர்.

இடைவிடாமல் படப்பிடிப்பு நடந்துவரும் இப்படம் மே மாதம் வெளிவருகிறது. ஒளிப்பதிவை பெஞ்சமின் கவனிக்கிருர்.

டைரக்டர் ஸ்ரீதரிடம் உதவி டைரக்டராக பணிபுரிந்து வந்த வக்கீல ஆர். ஸ்ரீதர் பாபு இப்படத்தை டைரக்ட் செய்கிருர்.

### இன்றைய சினிமா

**சென்னை**

| | |
|---|---|
| காமதேனு: | இதயக்கனி |
| மேற்கு மாம்பலம் நேஷனல்: | அமர தீபம் |
| ராம்: | கணவன் மனைவி |
| சராஸ்: | பல்லாண்டு வாழ்க |
| நியூ எல்பின்ஸ்டோன்: | அலிபாபாவும் 41 திருடர்களும் |
| தரோம்பேட்டை வெற்றி: | அந்தரங்கம் |
| | கல்யாணப் பரிசு |

**பல்லாவரம்**

| | |
|---|---|
| லட்சுமி: | தசாவதாரம் |

**தாம்பரம்**

| | |
|---|---|
| நேஷனல்: | சுவாமி ஐயப்பன் |

**கொளத்தூர்**

| | |
|---|---|
| ஸ்ரீ குமரன் | அன்பே ஆருயிரே |

**திருக்கழுக்குன்றம்**

| | |
|---|---|
| கன்னியப்பா | ஏழைக்கும் காலம் வரும் |
| புவனேஸ்வரி | ரோஷக்காரி |

''துணிவே துணை'' படத்தில் ஜெய்சங்கர், ஜெயபிரபா.

## 'காமராஜ் உயில்' என சிவாஜி வர்ணித்த 20 அம்ச திட்டம்

நாட்டில் அவசர நிலையை அறிவிக்கப்பட்டதைத் தொடர்ந்து 1975 ஜூலை 1-ம் தேதி பிரதமர் இந்திரா காந்தி புரட்சித் திட்டத்தை அறிவித்தார். 20 அம்சங்கள் அவரது அறிவிப்பில் இடம் பெற்றன.

அந்த 20 அம்ச புரட்சித் திட்டம் வருமாறு:—

1. அவசியப் பொருள்களின் விலைவாசியைகுறைக்க தொடர்ந்து நடவடிக்கை. உற்பத்திக் கொள்முதல் விநியோக சிரமைப்புத் திட்டம் அரசின் செலவில் சிக்கனம்.

2. நில உச்சவரம்புச் சட்டம் தீவிரமாக அமுல் படுத்தப்படும். உபரி நிலங்கள் ஏழைகளுக்கு விரைவாக வழங்கப்படும். நில உடமை பற்றிய சான்றுகள் தயாரிக்கப்படும்.

3. நிலமற்ற, ஏழை மக்களுககு வீட்டு மனைகள் விரைவாக வழஙகப்படும்.

4. தொழிலாளர்களை அடிமைபோல நடத்துவது, காண்ட்ராக்ட் முறை சட்ட விரோதமானதாக அறிவிக்கப்படும்.

5. கிராமப்புற மக்களின் கடன் சுமை நீக்கப்படும். நிலமற்ற விவசாயத் தொழிலாளர்கள், சிறு விவசாயிகள் கைவினைஞர்களிட மிருந்து கடன் வசூலிப்பதை நிறுத்தி வைக்க சட்டம் கொண்டுவரப்படும்.

6. விவசாயத் தொழிலாளர்களின் குறைந்தபட்ச ஊதியம் பற்றிய சட்டம் மறு ஆய்வு செய்யப்பட்டு ஊதியம் உயர்த்தப்படும்.

7. புதிதாக ஒரு கோடியே 20 லட்சம் ஏக்கர் நிலத்திற்கு பாசன வசதி செய்துதரப்படும். பூமிக்கு அடியிலுள்ள நீரைப்பயன்படுத்த நாடு தழுவிய திட்டம் வகுக்கப்படும்.

8. மின்சாரத் திட்டங்கள் முடுக்கிவிடப்படும். ராட்சத அனல மின்நிலையங்கள் மத்திய அரசின் கீழ் அமைக்கப்படும்.

9. கைத்தறி தொழில் வளர்ச்சிக்குப் புதியதிட்டம் வகுக்கப்படும்.

10. சாதாரண மக்கள் அணியும் துணிகளின் தாம் அதிகரிக்கப்பட்டு தாராளமாக கிடைக்கவழிசெய்யப்படும்.

11. நகர்ப்புற மற்றும் நகர்ப்புறமாக்கக் கூடிய பகுதி நிலங்கள் சமூக உடமை ஆக்கப்படும். காலி நில உடமைகட்கு உச்சவரம்பு கொண்டுவரப்படும்.

12. அரசுக்குத் தெரியாமல் ஏராளமான விலையில் வீடுகள் கட்டுவது, வரி ஏமாற்றுவது ஆகியவற்றைக் கண்டு பிடிக்கத் தனி படைகள் அமைககப்படும். வரி ஏய்ப்பு, பதுக்கல், கடத்தல் போன்ற பொருளாதாரக் குற்றங்கள் செய்வோருக்குக் கடும் தண்டனை விதிக்கப்படும்.

13. கடத்தல்காரர்களின் சொத்துக்களைப் பறி முதல் செய்ய தனிச் சட்டம் வரும்.

14. தொழில் முதலீடுகளுக்கான வரை முறைகள் தளர்த்தப்படும். இறக்குமதி லைசென்சுகளை தவருக பயன் படுத்துவோர் மீது கடும் நடவடிக்கை எடுக்கப்படும்.

15. தொழில்கள், தொழிற்சாலைகளில் தொழிலாளர்களும் நிர்வாகத்தில் பங்கு பெற புதிய திட்டங்கள் வகுக்கப்படும்.

16. சாலை போக்குவரத்துக்கு தேசிய மட்டத்தில் பெர்மிட் வழங்கும் திட்டம் வரும்.

17. மத்தியதர மாதவருவாய் உள்ளவர்களுக்கு நிவாரணம் தர வருமான வரி வரம்பு 6 ஆயிரம் ரூபாயிலிருந்து 8 ஆயிரமாக உயரும்.

18. விடுதியில் தங்கிப்படிக்கும் மாணவர்களுக்கு அவசியமான பொருட்கள் கண்ட்ரோல் விலையில் வழங்கப்படும்.

19. மாணவர்களுக்கு நோட்டு புத்தகங்கள் மற்றும் இதர பொருட்கள் கண்ட்ரோடு விலையில் வழங்கப்படும்.

20. எல்லா மக்களுக்கும் குறிப்பாக ஏழைகளுக்கு வேலைவாய்ப்பு, பயிற்சி வாய்ப்பை அதிகரிக்க உதவித் தொகையுடன் கூடிய பயிற்சித் திட்டம் வகுக்கம்படும். இவை பிரதமர் அறிவித்த புரட்சித் திட்டங்கள் ஆகும்.

## கவர்னரின் ஆலோசகர்-மத்திய மந்திரிகள் முக்கிய ஆலோசனை

சென்னை, பிப். 15—சென்னையில் கவர்னரின் ஆலோசகர்களுடன் மத்திய உள்துறை ராஜாங்க மந்திரி ஓம் மேத்தா நேற்று முக்கிய ஆலோசனை நடத்தினுர்.

நாளை மத்திய மந்திரி பிரம்மானந்தரெட்டி, தமிழ்நாட்டு நிலை பற்றி கவர்னரின் ஆலோசகர்களுடன் விவாதிப்பார்.

மத்திய உள்துறை துணை மந்திரி ஓம் மேத்தா நேற்று கோட்டையில் கவர்னரின் ஆலோசகர் தவே, போலீஸ் ஐ ஜி. அருள், போலீஸ் கமிஷனர் கிருஷ்ணசாமி, அரசு தலைமைச் செயலாளர் சபாநாயகம், துறைகளின் தலைவர்கள் ஆகியோரை சந்தித்து, தமிழ்நாட்டிலுள்ள சட்ட ஒழுங்கு நிலைமை உட்பட பல்வேறு துறைகளின் பணிகள்பற்றியும், குறிப்பாக 20 அம்சத் திட்டம்பற்றியும் விவாதித்தார். இந்த விவாதம் இன்றும் தொடரும்.

### பிரம்மானந்த ரெட்டி

இந்திய உள்துறை அமைச்சர் பிரம்மானந்த ரெட்டி சென்னையில் 3 நாள் தங்கியிருப்பார். மாநிலத்தில் உள்ள சட்டம்ஒழுங்கு நிலையை பற்றியும், ராஷ்டிரபதி ஆட்சிக்குப பினபுள்ள நிலைமை குறித்தும், மற்ற நிர்வாக விஷயங்கள் பற்றியும் கவர்னரின் ஆலோசகர்களுடனும், உயர்தர அதிகாரிகளுடனும், விவாதிப்பார்.

Printed by S. V. G. Sowrirajulu at the M. C. P. P. S. Press, No. 4, South Bank Road, Madras-28, and Published by him for the Madras Co-operative Printing and Publishing Society Ltd.
Editor incharge: G. Dhanaraj